வின் சொற்கேளாமல் தன் தொழிலை விட்டால் ப்ரபு அவனை தண்டிப்பான். அப்படி தண்டிக்கப்பட்டவன் தன்னை தண்டனையிலிருந்து விலக்கிக்கொள் வதற்கு என்ன நீதி உண்டோ அதுவே இங்கும் அறியத்தக்கது. அதற்கு இரண்டு கார்யங்கள் செய்யத்தக்கவை - (1) இப்போது முதல் அந்த ப்ரபுவின் கட்டளையை மீறுவதில்லை, என்று தீர்மானம் செய்தல். (2) செய்த குற்றங்களை மன்னித்து முன்போல் தன்னை இன்பமுறச் செய்யவேணும் என்று பகவானை வேண்டுதல். இதையே சரணாகதி என்று பேசுகிறோம். இது உலக நீதியில் ஏற்பட்டதும் சாஸ்திரங்களில் விதிக்கப்பட்டதுமான சுளுவான வழி. நாம் நல்லது செய்தாலும் கெட்டது செய்தாலும், துன்பங்கொண்டாலும் இன்பங் கொண்டாலும் அப்பரமாத்மாவின் ஆட்சிக்கு வெளிப்பட்டிருக்க முடியாது. ஆதலால் அவன் திருவடிகளைப்பிடித்துக் கொள்வதே எளிதும் பயன் தரக் கூடியதுமான கார்யம் என்பது இதில் திரண்டபொருள்.

## पञ्चमः श्लोकः

## ஐந்தாவது ச்லோகம்

मोक्षोपायार्हतैवं भवति भवभृतां कस्यचित् क्वापि काले तद्वद्भक्तिप्रपत्योरधिकृति नियमस्तादृशा स्यान्नियत्या ॥ शक्ताशक्तादि तत्तत्पुरुष विषयतः स्थाप्यते तद्व्यवस्था, यच्चाहुस्तद्विकल्पः सम इति कतिचित् तत् फलस्याविशेषात्.

व्या :—ईदृशोपदेश लब्ध सम्यग्ज्ञानस्य पुरुषस्य "अनित्य-मसुखं लोक मिमं प्राप्य भजस्व माम्" "मामेकं शरणं व्रज" इत्यादिभिः अपवर्गोपायतया विहितयोः भक्तिप्रपत्योः अधिकारव्यव-स्थामाह—मोक्षोपायेति.

பதவுரை :—பவப்ருதாம் - ஸம்ஸாரிகளுக்குள், கஸ்யசித் - ஒருவனுக்கு, க்வாபிகாலே - ஒருகாலத்தில். ஏவம் கீழ்ச்லோகத்தில் கூறியபடி உபதேசம் பெற்றதின் பயனாக, மோக்ஷோபாயார்ஹதா - மோக்ஷோபாயத்தில் அதிகாரம், பவதி - ஏற்படுகிறது, தாத்ருசா - அப்படிப்பட்ட, நியத்யா - தைவவசத்தால், தத்வத் - அதைப்போலவே, அதாவது - அநேககோடி ஜீவராசிகளில் ஒருவனுக்கு ஒரு காலத்தில் மோக்ஷோபாயாதிகாரம் ஏற்பட்டது போலவே, பக்திப்ரபத்யோ: - பக்திப்ரபத்திகளில் அதிக்ருதிநியம: - அதிகாரவ்யவஸ்தை அதாவது இன்னானுக்கு இன்னது தான் என்ற ஏற்பாடு; உண்டாகக்கூடும். தத்வ்யவஸ்தா - அந்த வ்யவஸ்தை, சக்தாசக்தாதிதத்தத்புருஷ விஷயத: - சக்தியுள்ளவன் என்றும் சக்தியற்றவன் என்றும் இது முதலான அந்தந்த புருடர்களின் விஷயமாக, ஸ்தாப்யதே - நிலைநிறுத்தப்படுகிறது. கதிசித் - சிலர், தத்விகல்ப: - அவ்விரண்டிலொன்று என்றது, ஸம: - மேன்மை தாழ்மை யில்லாதது, இதி - என்று ஆஹு: யத் - சொல்லுகின்றனர் என்பது யாதொன்று உண்டோ, தத் - அது, பல ஸ்யாவிசேஷாத் - பயனில் வித்யாஸமில்லாதது கொண்டு, என்று அறியவும்.

உரை :—உலகத்தின் தத்துவஞ்ஞானமே ஞான மெனப்படும். மற்றது அஜ்ஞானமே என்று சொன்ன படிக்கு, நல்ல ஆசார்யனை அடைந்து, முறைப்படி அடி

பணிந்து, அவனுல் உபதேசிக்கப்பட்ட தத்துவஞ் ஞானத்தை அடைந்தபின், அழிவுற்றதும் துன்பம் கலந்தது மான இவ்வுலகவாழ்க்கையில் வெறுப்புற்று, அதன்மேல் மோக்ஷத்தில் ருசி பிறந்து, மோக்ஷோபாயம் எது என்று விசாரிக்கையில், பக்தி என்னும் ப்ரபத்தி என்னும் இரண்டு உபாயங்கள் உண்டு என்று தெரிந்தவன் அவ் வுபாயாநுஷ்டானத்துக்கு அதிகாரி ஆகிருன் - இவ்விரண்டு உபாயங்களும் ஒருவனுக்கே உரித்தானவையா? அல்லது - வெவ்வேறு யோக்யதை உள்ளவர்களுக்கா? என்று விசாரித்து தீர்மானிக்கிருர் இந்தச் ஶ்லோகத்தால் - இரண்டு உபாயங்களும் வெவ்வேறு அதிகாரிகளுக்கென்று தீர் மானம். "ஓடியோடிப் பல பிறப்பும் பிறந்து" "வாடி னேன் வாடிவருந்தினேன் மனத்தால் பெருந்துயரிடும்பை யிற் பிறந்து" என்றும் சொல்லுகிறபடி அநாதி காலமாய் ஸம்ஸார மருகாந்தாரத்தில் உழன்று திரிகிற ஜீவராசிகளில் சிலருக்கே மோக்ஷோபாயாநுஷ்டானத்தில் அதிகாரம் ஏற்படுவதுபோல் பக்தி என்னும் கடினமான உபாயத்தி லும், ப்ரபத்தி என்னும் சுளுவான உபாயத்திலும் வெவ் வேறு புருடர்களுக்கே அதிகாரம் ஸ்தாபிக்கப்பட்டிருக் கிறது. அதுக்கு மூலகாரணமும் முன்செய்த வினைப் பயனுக வந்த எம்பெருமானுடைய ஸங்கல்ப விசேஷமே. கடினமான உபாயத்தை அநுஷ்டிக்கவல்லவன் கடினமான உபாயத்தையே ஒப்புக்கொள்ளவேணும் அப்படியல்லாத அகிஞ்சநாதிகாரி எளிதான உபாயத்தில் இறங்கவேணும் என்று ஒன்றுக்கொன்று கலத்தல் அன்றியே வ்யவஸ்தை ஏற்படுத்தப்பட்டிருக்கிறது - மநோநிக்ரஹமும் ஞான வைராக்யாதி ஸாமக்ரீகளும் நிறையப்பெற்ற ஸ்ரீவ்யாஸாதி களுக்கு மோக்ஷோபாயமாக பக்தி யோகத்தையே

அங்கீகரிக்கவல்லமையும்-அவர்களுக்கு யமநியமாஸநப்ராணயா மாதிகளை உள்ளபடி செய்து நிறைவேற்ற திறமை உண்டு. நம்மைப்போன்ற அசக்தர்களுக்கு சரணாகதியே ஏற்றவுபாயம். ஆனால் சில சாஸ்திர வசனங்களில் 'பக்தியின் மூலமாகவாவது ப்ரபத்தியின் மூலமாகவாவது பகவானை அடையலாம்' என்று இரண்டையும் துல்ய விகல்பமாக அதாவது - அனைவரும் இஷ்டப்படி இரண்டிலொன்றை கைப்பற்றவமையும், என்று கூறியிருக்கிறதே, அங்கு அதிகாரி பேதம் கூறப்படவில்லையே என்றால் - அது பயனில் இரண்டுக்கும் வித்யாஸமின்மையைக்கருதி கூறப்பட்டதே யல்லாமல் அதிகாரிபேதம் இல்லை என்ற அபிப்ராயத்தால் அல்ல. ஆதலால் ஒவ்வொருவனும் தன்னுடைய சக்தி அசக்திகளைக்கண்டு எந்தவுபாயத்தில் தனக்கு அதிகாரம் என்பதை உணர்ந்து, தனக்கு ஏற்றதான உபாயத்தை ஸ்வீகரிக்கவேணும். சக்தி உள்ளவன் அசக்தனுக்குரிய உபாயத்தை எடுத்துக் கொள்ளக் கூடாது. அசக்தன் சக்தனுக்குரிய உபாயத்தை எடுத்துக்கொள்ளவும் கூடாது. எப்போதும் இயற்கையில் ஏற்பட்டதாகிய நல்ல விஷயத்தை மாற்றுவதற்கு முயலுவது தவறு என்று தாத்பர்யம்.

## षष्ठः श्लोकः

## ஆறுவது ச்லோகம்

सानुक्रोशे समर्थे प्रपदनमृषिभिः स्मर्यते
भीष्टसिध्द्यै लोकेप्येतत् प्रसिद्धं नच विमतिरिह प्रेक्ष्यते

क्वापि तन्त्रे ॥ तस्मात् कैमुत्यसिद्धं भगवतितु भरन्यास विद्यानुभावं धर्मस्थेयाश्च पूर्वे स्वकृतिषु बहुधा स्थापयाञ्चक्रुरेवम् ॥

व्या :—इत्थमधिकारिभेदात् गुरुलघुविकल्प संभवेपि प्रपत्तिप्रभावे, दुर्बलबुद्धीन् प्रत्याययति सानुक्रोशे इति—लोकेप्येतत् प्रसिद्धमिति—वानर वायस राक्षस द्रौपदी गजेन्द्र सुमुख त्रिशङ्कु शुनश्शेफाद्युपाख्यानैरिति शेषः। धर्मस्थेयाः—विवाद गोचर धर्म निर्णेतारः पूर्वे भगवद्यामुनादयः.

பதவுரை — அபீஷ்டஸித்யை - இஷ்டம் பெறுவதற்கு, ஸாநுக்ரோசே - தயை உள்ள, ஸ்மர்த்தே - வல்லவனிடத்தில், ப்ரபதநம் - அடைக்கலம் புகுதல், ரிஷிபி: - ரிஷிகளால். ஸ்மர்யதே - விதிக்கப்படுகிறது. ஏதத் - இவ்விஷயம், லோகேபி - உலக நடத்தைகளிலும், ப்ரசித்தம் - ப்ரசித்தமானது, இஹ - இவ்விஷயத்தில், விமதி: - அபிப்ராயபேதமானது, க்வாபி தந்த்ரே - ஒரு சாஸ்திரத்திலும், நப்ரேக்ஷ்யதே - காணப்படுகிறதில்லை. தஸ்மாத் - ஆதலால், பகவதி - பகவானிடத்தில், கைமுத்யசித்தம் - கைமுத்யம் என்னும் ந்யாயத்தால் சித்தமான, பரந்யாஸ வித்யாநுபாவம், பரந்யாஸம் என்னும் வித்யையின் மஹிமையை, தர்மஸ்தேயா: - தர்மங்களை நிர்ணயிக்கிறவர்களான, பூர்வே - ஸ்ரீ ஆளவந்தார் முதலான முன்னோர், ஏவம் - முன்கூறியபடி ஸ்வக்ருதிஷு - தாங்கள் இயற்றிய நூற்களில் - ஸ்தாபயாஞ்சக்ரு: விசாரித்து முடிவு செய்தனர்.

உரை—முன்ச்லோகத்தில் பக்திப்ரபத்திகளை அநுஷ்டிக்க அதிகாரிபேதத்தை நிர்ணயித்துக் காட்டினார். பயன் ஒன்று. உபாயம் இரண்டு, அவற்றில் ஒன்று மிகக்கடினம், மற்றொன்று மிக ஸுலபம். பெறும் பயனோ. மிகப் பெருமை வாய்ந்தது. ஆதலால் - ப்ரபத்தியைக்கொண்டு அப்பெரும் பயன் பெறுவது ஸாத்யமா? என்று ஸம்சயம் உண்டாக, அச்சந்தேசத்தை நீக்க. யுக்தியும் ப்ரமாணமும் கூறுகிறார் - இந்த ச்லோகத்தில் - இஷ்டம் பெறுவதற்கும், அநிஷ்டத்தை அகற்றுவதற்கும், சக்தியில்லாதவன் மற்றவனை சரணம் புகுவது என்பது மஹரிஷிகளால் அங்காங்கு தர்மசாஸ்திரங்களிலும் புராண இதிஹாஸ ஆகமங்களிலும் கூறப்பட்ட விஷயம். சக்தி உள்ளவனும் இரக்கமுள்ளவனுமானவனிடத்தில் செய்யப்பட்ட சரணாகதி பலித்தே தீரும். இவ்விஷயம் உலகத்தில் பல உதாகரணங்களால் காணப்பட்டிருக்கிறது.

### வாநரக்கதை

காட்டில் புலிக்கு பயந்து மரத்தில் ஏறியிருந்த ஒரு வாநரம், புலியால் துரத்தப்பட்ட மனிதனொருவன் அதே மரத்தில் ஏற, அவ்வாநரம் தன்னை கீழே தள்ள முயன்றவனாயினும் அவன் சரணாகதன் என்றதுபற்றி இரக்ஷித்தது.

### காக்கை

இராமாயணத்தில் ஸ்ரீராமன் பெருங் குற்றவாளியாயினும் சரணாகதிசெய்ததால் காகாசுரனை கொல்லாமல் புத்திகாட்டி அனுப்பினார் என்பது ப்ரசித்தமான கதை.

### இராக்ஷஸன்

விபீஷணன் சரணமடைய ராமன் ரக்ஷித்தது.

### திரௌபதி

ஸபையில் மாநபங்கம் வராமலிருக்கும் பொருட்டு திரௌபதி சரணமடைய ஸ்ரீ கிருஷ்ணன் காப்பாற்றியது.

### கஜேந்திரன்

முதலையின் வாயில் அகப்பட்டுக்கதறுகின்ற யானையை பகவான் காப்பாற்றியது.

சுமுகன் என்ற ஸர்ப்பம் விஷ்ணுவை சரணமடைந்து கருடனிடம் தீங்கு நேராமல் வரம் பெற்றான்.

### த்ரிசங்கு

த்ரிசங்கு என்னும் அரசன் விச்வாமித்திரரை சரணமடைய அவன் குறையை நீக்கி முனிவன் அருளியது.

### சுநச்சேபன்

இப்பெயர்பூண்ட ஒரு ரிஷிகுமாரன் பெற்றோரால் யாகபசுவாக விற்கப்பட்டு ப்ராண ஸம்ரக்ஷணத்துக்காக சரணமடைய விச்வாமித்திரர் தபோபலத்தாலும் மந்திர பலத்தாலும் அவனை இரக்ஷித்தது.

இப்படி பல விடங்களில் ஆபத்தை அடைந்தவன் சரணாகதி செய்வதும், காப்பாற்ற சக்தி உள்ளவன் காப்பாற்றுவதும் உலக வழக்கத்தில் ஏற்பட்டதொரு நீதி. என்றார் - சரணாகதனை ரக்ஷிக்காமல் உபேக்ஷை செய்வது மஹாபாப மாகும் என்று ஸ்மிருதிகள் கூறுகின்றன. இவ்விஷயத்தில் எந்த நூலிலும் மாறான அபிப்ராயம் கூறப்படவில்லை. பகவான் விஷயத்தில் இந்த நீதி கைமுத்யந்யாய சித்தம் என்கிறார். - அதாவது - ஸாதாரண ஜநங்களிடத்திலேயே, சரணாகதனை ரக்ஷித்த வரலாறு காணப்படுத

லால் பகவானிடத்தில் சரணுகதி செய்வதும், அவன் ரக்ஷிப்பதும் கேழ்க்கவேணுமா? என்று கூறும் ந்யாயம், தர்மாதர்மங்களை நிர்ணயம் செய்வதற்கு அவதரித்த மஹான்களும் பற்பல நூற்களில் இவ்விஷயத்தை பல ஆதாரங்களைக்கொண்டு தீர்மானித்தனர் ஆதலால் சிறிய உபாயத்தால் பெரிய பயன் கிடைப்பதில் ஸம்சயம் வேண்டா. மஹாவிச்வாஸம் இருந்தால் பயன் கிடைப்பது நிச்சயம். உலகத்தில் சாஸ்திரங்களில் கூறியவை எல்லாம் பயன்தருவது நமது நம்பிக்கையைப் பொருத்தது ஆகக் காண்கிறோமல்லவா. ஆகவே ப்ரபத்தியால் நலம் பெறுவதற்கு மஹாவிச்வாஸம் முக்கியகாரணம் என்று தாத்பர்யம்.

## ஏழாவது ச்லோகம்

### सप्तमः श्लोकः

शास्त्रप्रामाण्यवेदी नन विधिविषये निर्विशङ्कोऽधिकारी विश्वासस्याङ्गभावे पुनरिह विदुषा किं महत्वप्रसाध्यम् ॥ मैवं घोरापराधैस्सपदि गुरुफले न्यासमात्रेण लभ्ये शङ्का पार्ष्णिग्रहार्हा शमयितुमुचिता हेतुभिस्तत्तदर्हैः ॥

व्या :—अस्त्वेवमतिशङ्कापरिहारेण सर्वशास्त्रसाधारणो विश्वासः तस्य प्रपत्तिलक्षणवाक्ये महत्व विशेषणं किमर्थमित्यनुभाष्य परिहरति—शास्त्रप्रामाण्यवेदीति—अत्रार्थस्वभावेन शङ्काप्रकर्ष

संभवात् तन्निवृत्यै " विदितस्सहिधर्मज्ञः" " मित्रभावेन संप्राप्तम् " " सकृदेव प्रपन्नाय " इत्यादिशरण्य गुणविशेषादि विमर्शभूत महाविश्वासप्रकर्षः संपाद्यः इतिभावः

பதவுரை—சாஸ்திரப்ராமாண்ய வேதீ - சாஸ்த்ரம் ப்ரமாணமாகும் முறையை நன்கு அறிந்த, அதிகாரீ - ப்ரபந்நாதிகாரியானவன், விதிவிஷயே - சரணகதியை விதித்ததில், நிர்விசங்கோநு - ஸந்தேஹமில்லாதவன் அல்லவா. புந: - பின்னேயும், இஹ - இந்த சரணகதியில், விச்வாஸஸ்ய - விச்வாஸம், அங்கபாவே - அங்கமாயிருக்கையில், விதுஷா - தெரிந்தவனால், - மஹத்வப்ரஸாத்யம் - மஹத் அதாவது பெரிது என்ற விசேஷணத்தால் ஸாதிக்கக் கூடியது, கிம் - எது, மைவம் - அப்படி அல்ல, கோரா பராதை: அதிக குற்றம் செய்தவர்களால், ந்யாஸ மாத்ரேண - சரணகதியை மாத்திரம் கொண்டு, ஸபதி - தத்க்ஷணத்தில், குருபலே - பெரியதொரு பயன், லப்யே - அடையப்பட விருக்கையில், பார்ஷ்ணிக்ர ஹார்ஹா - பின் தொடரக் கூடிய, சங்கா - ஸந்தேஹம் - தத்ததர்ஹை: - அவ்வவற்றுக்கு ஏற்ற, ஹேதுபி: - ஹேதுக்களால், சமயிதும் - போக்கப்படுவதற்கு, உசிதா - தக்கது.

உரை—கார்யாகார்யங்களில் சாஸ்திரமே ப்ரமாணம் என்று பகவத்கீதையின் உபதேசம், சிஷ்யனுக்குரிய குணங்களிலும் சாஸ்த்ர விச்வாஸசாலீ என்று முன்பே சொன்னோம். ப்ரபத்தியில் இறங்கின அதிகாரி, சாஸ்திரத்தில் பூர்ணமான ப்ராமாண்யபுத்தி - அதாவது - இதில் சொன்னது உண்மை என்ற நம்பிக்கை கொண்டவன். " மாமேகம் சரணம் வ்ரஜ " இத்யாதி விதிவாக்யங்களில் ஸந்தேஹம் கொஞ்சமேனுமில்லாதவன். ஆதலால் -

சரணாகதிக்கு அங்கங்களைக் குறிக்கும்போது ஆநுகூல்ய ஸங்கல்பாதிகளின் நடுவில் விச்வாஸமும் ஒருஅங்கம் என்று சொன்னால் போதாதா? வித்வானுக்கு இங்கு மஹாவிச் வாஸம் என்று மஹா என்ற விசேஷணம் கொடுத்ததனால் சாதிக்க வேண்டியது என்ன இருக்கிறது? என்ற கேள்விக்குமேல் ஸமாதானம் கூறுகிறார் - அப்படி சொல்லக் கூடாது - ஏனெனில் - நாம் பெருங் குற்றவாளிகளா யிருக்கிறோம் - சரணாகதியோ - மிகவும் எளிதான சுளு வான உபாயம். பெறக்கூடிய பயனோ மிகப்பெரியது. இப்படிஇருக்க. சிறு தொகையைக்கொண்டு மிகப்பெரிய தொகையால் கிடைக்கத்தகுந்த பொருள் கிடைக்கும் என்றால் அனைவருக்கும் ஸம்சயம் உண்டாவது இயல்பு தானே. அதுபோல் இங்கு ஸம்சயம் பின்தொடரும் என்பது நிச்சயம் - அந்த ஸம்சயத்தை அதற்குத்தக்க காரணங்களைக் கூறி நீக்க வேண்டியது அவச்யமாகிறபடி யால், பெரிய பயனுக்குத்தக்கபடி உபாயமும் பெரிதுதான் என்று காட்டவேண்டி மஹா என்று விசேஷணம் கொடுக்கப்பட்டது என்று தாத்பர்யம் - இந்த விச்வா ஸத்தை பெரிதாக்கிக் கொள்ள என்ன உபாயம் என்றால் - ஆங்காங்கு கூறப்பட்ட எம்பெருமானுடைய குண விசேஷங்களை அநுஸந்திப்பதே யாகும். அதாவது - "விதிதஸ்ஸஹிதர்மஜ்ஞ" என்று தொடங்கி ஸ்ரீராமா யணத்தில் கூறப்பட்டது - பிராட்டி, இராவணனுக்கு உபதேசம் செய்யும் ஸந்தர்ப்பத்தில் இந்தச்லோகம். ஏ ராவணா - இராமனிடத்தில் நட்புகொள்வாயாக, அவர் தர்மங்களையும் அதர்மங்களையும் நன்கு அறிந்தவர் என்று உலகமெங்கும் புகழப்பெற்றவர். சரணாகதர்களிடம் மிகுந்த அன்பு பூண்டவர், என்று "மித்ரபாவேநஸம்ப்ராப்

தம்'' என்று. இது இராமன் அருளிய வாக்யம் - என்னிடம் தோழமையோடு வந்தவனை நான் எவ்விதத்தி லும் அதாவது அவனிடத்தில் எவ்வளவு தோஷங்கள் இருந்தாலும் கைவிடமாட்டேன் என்று. ''ஸக்ருதேவ ப்ரபந்நாய'' இதுவும் இராமன் வாக்யமே - நான் இருந்த விடம் வந்து, ''நான் உன்னைச்சேர்ந்தவன்'' என்று யாசித்தவன் எவனாயினும் அவனுக்கு அபயம் அளிப்பது என்னுடைய விருதம் என்று - இன்னம் பலவிடங்களில் இவற்றின் விரிவைக்காணலாம். ஆதலால் இங்கு அநுஷ்டிக்கப்படுகிற உபாயம் மிகச்சிறிதாயினும் அதுக்கு அங்கமான விச்வாஸம் மிகப் பெரிதாகையால் பெரிய பயனாகிய பேரின்பம் பெறத்தட்டில்லை என்று கருத்து.

### अष्टमः श्लोकः

### எட்டாவது ச்லோகம்

नेहाभिक्रान्तिनाशो नच विहतिमति प्रत्यवायो भवेदित्युक्तं कैमुत्यनीत्या प्रपदनविषये योजितं शास्त्र विद्भिः ॥ तस्मात् क्षेत्रे तदर्हे सुविदितसमयै र्देशिकैः सम्यगुप्तं मन्त्राख्यं मुक्तिबीजं परिणतिवशतः कल्पते सत्फलाय ।

व्या—किमीदृशविश्वासापेक्षतया गुरुतरया प्रपत्या ? "सकृ ज्जप्तेन मन्त्रेण कृतकृत्य स्सुखी भवेत्" प्रपत्तिवाचैव निरीक्षितुं वृणे" इत्यादि प्रमाण संप्रदायैः शरणागतिमन्त्रोच्चारण मात्रेणैव मुक्तिः

सिध्येदित्यत्राह—नेहाभीति—उक्तमिति कर्मयोगाधिकारे इति शेषः "सकृदुच्चरितं येन हरिरित्यक्षरद्वयम्" इत्यादिन्यायेनात्र मन्त्रोच्चारणादिकं यथावस्थितप्रपत्त्यनुष्ठानमुत्पाद्य तन्मुखेनैव मुक्तिं साधयति यथोक्तं सात्वततन्त्रे।

अनेनैवतु मन्त्रेण स्वात्मानं मयि निक्षिपेत्
मयिनिक्षिप्तकर्तव्यः कृतकृत्यो भविष्यति" इति।

பதவுரை :—இஹ - இந்த கர்மயோகத்தில், அபிக்ராந்தி - ஆரம்பத்துக்கு, நாச: - பயன் தராமல் வீணுகப் போவது, ந - இல்லை, விஹதிமதி - முடிவதற்கு முன் தடைபட்டு நின்று போய்விட்டால், ப்ரத்யவாய: - பெருங் குற்றமும், நபவேத் - உண்டாகாது, இதி - இவ்விதம், உக்தம் - கர்மயோகத்தில் சொன்னது, சாஸ்திரவித்பி: - சாஸ்திர மறிந்தவர்களால், ப்ரபதநவிஷயே - சரணுகதியின் விஷயத்தில், கைமுத்யநீத்யா - கைமுத்தியம் என்ற ந்யாயத்தைக் கொண்டு, யோஜிதம் - இணைக்கப்பட்டது, தஸ்மாத் - ஆதலால், ஸுவிதிதஸமயை: - காலமறிந்த, தேசிகை: - ஆசார்யர்களால் ததர்ஹே - அதற்குத்தகுந்த, க்ஷேத்ரே - பூமியில் இடத்தில், அதாவது குணம்நிறைந்த சிஷ்யனிடத்தில், ஸம்யக் - நன்ருக உப்தம் - விதைக்கப்பட்ட, மந்த்ராக்யம் - மந்த்ரமென்னும், முக்தி பீஜம் - முக்தியின் விதை, பரிணதி வசத: - முதிர்ச்சி அடைவதால், ஸத்பலாய - நல்ல பழங்கொடுக்க, கல்பதே - ஏற்படுகிறது.

உரை - முன்ச்லோகத்தில் சரணுகதிக்கு மஹாவிச்வாஸம் முக்கியமான அங்கம் என்றும், அதில் மஹத் என்ற விசேஷணம் கொடுத்ததுக்கு ப்ரயோஜநத்தையும்

அருளிச் செய்தார். இப்படிப்பட்ட மஹாவிச்வாஸத்தை அங்கமாகக் கொண்டிருப்பதால் ப்ரபத்தியும் மிகக்கடினமான உபாயமாக ஏற்படுகிறபடியால் இதை செய்வதேன் ? சரணுகதி மந்த்ரத்தை ஒருதரம் உச்சரித்தால் மோக்ஷம் கிடைத்து க்ருதக்ருத்யனுகிருன் என்று வசநங்கள் கூறுகிறபடியால் மந்திரத்தை ஒருதரம் வாயினுல் சொன்னுல் போதாதோ என்ன, இதற்கு உத்தரமருளிச் செய்கிருர். ஆயுஷ்காலம் முழுவதும் அநுஷ்டிக்க வேண்டியதான கர்மயோகத்தைத் தொடங்கி நடுவில் விட்டு விட்டாலும், செய்த கார்யம் வீணுய் போவதில்லை, நடுவில் விட்டதால் கஷ்ட நஷ்டங்களும் இல்லை என்று ஸ்ரீபகவத்கீதையில் கர்மயோகத்தைப்பற்றி சொன்னதை இந்த ப்ரபதந விஷயத்திலும் அந்வயித்துக் கொள்ள வேணும் என்று வித்வான்கள் கூறியிருக்கின்றனர் அதாவது - ஸ்வல்பமேனும் செய்துவிட்ட கர்மயோகமானது, தான் அழியாமல் இட்டபடை கற்படையாய் நின்று, அநுகூலகாலம் வரும்போது நல்லபுத்தியைக் கொடுத்து பூர்த்தியாக கர்மயோகத்தையும் அதை அங்கமாகக்கொண்ட பக்தியோகத்தையும் செய்வித்து பயன் தருவதுபோல் இந்த மந்திரோச்சாரணமும் வீணுகாமல் தகுந்த காலத்தில் ப்ரபத்தியை அநுஷ்டிப்பித்து மோக்ஷத்தை தரவல்லது என்று பொருள். இம்மந்திரோச்சாரணம் விதை விதைப்பதுபோல். சரணுகதி அந்த விதையை ஜலம் கொடுத்து முளைக்கவைப்பது போலாகும் என்று கருத்து. இங்கு கைமுத்ய நீதியாவது - மிகச் சிறியதாகிய கர்மயோகத்துக்கே அப்படிப்பட்ட மஹிமை சொல்லியிருக்கிறபோது, மிகவும் உயர்ந்ததான மந்திரொச்சாரணம் வீணுகாது என்பதில் ஸந்தேஹம்

வேண்டாம் என்று சொல்லும் முறை. ஆதலால் பகவந்நாம ஸங்கீர்த்தநம், ப்ரபத்தி மந்திரோச்சாரணம் முதலிய நற்கார்யங்கள் எல்லாம் ப்ரபத்தியிலே மூட்டி அதின் மூலமாய் பயன் தரவல்லது. ஆனதுபற்றி ப்ரபத்தி அநுஷ்டிக்கவேண்டியது அவச்யமே என்று கருத்து.

### नवमः श्लोकः
### ஒன்பதாவது ச்லோகம்

न्यासः प्रोक्तोतिरिक्तं तप इति कथितस्स्वध्वर श्चास्य कर्ता हिर्बुध्न्योप्यन्ववादीदगणि दिविषदा मुत्तमं गुह्यमेतत् ॥ साक्षान्मोक्षाय चासौ श्रुत इह तु मुधाबाधशङ्का गुणाढ्ये, तन्निष्ठोह्यन्यनिष्ठान् प्रभुरति शयितुं कोटिकोट्यं शतोपि ॥

व्याख्या—नन्वेवं प्रपत्तिरपि भक्तियोगद्वारेणैव मुक्तिहेतुः स्या दित्याशङ्कायां, "मुमुक्षुर्वै शरणमहं प्रपद्ये" इति श्रुतिस्वारस्यसिद्धं अव्यवहितमोक्षसाधनत्वं, व्यञ्जकान्तरैरपि द्रढयति—न्यासः प्रोक्त इति; प्रोक्तः—"तस्मान्न्यासमेषां तपसामतिरिक्तमाहुः" इति वाक्येन - कथितः—"यस्समिधेत्यारभ्य योनमसा सस्वध्वरः" इत्यन्तेन ऋगंशेन; अन्ववादीत्—ऋगर्थमीशानोन्वभाषत ; यथा— "समित्साधनकादीनां यज्ञानां न्यासमात्मनः॥ नमसायोकरोद्देवे सः स्वध्वर इतीरितः" इति - अगणि—"एतद्वै महोपनिषदं देवानां

गुह्यम्" इत्यादिश्रुत्या। तन्निष्ठ इत्यादिना—"सत्कर्मनिरताश्शुद्धा" इत्यादुक्तः प्रपन्नप्रभावो विवृतः॥ यद्यपि, "ओमित्यात्मानं युञ्जीत" इति प्रणवकरणको न्यासः श्रुतः, तथापि, तदनर्हाणां तद्विरहेऽपि, तन्त्रोक्तप्रकारेण तत्प्रयोगो युज्यत इत्यभिप्रायेण तन्निष्ठ इति सामान्योक्तिः। श्रुतिसिद्धेऽपि प्रपदने, सामान्य धर्मभूत सत्यवचनादि नयात् सर्वाधिकारत्वं च न विरुद्धम् "सर्वस्य शरणं सुहृत्" "सर्वलोक शरण्याय" इत्यादिष्वेतदभिप्रेतम्।

பதவுரை—ந்யாஸ: - பரந்யாஸம், சரணுகதி, அதிரிக்தம் - மற்ற எல்லாவற்றிற்காட்டிலும் உயர்ந்ததான, தப: - தவம், இதி - என்று, ப்ரோக்த: - கூறப்பட்டது, அஸ்ய கர்த்தா - இதைச் செய்தவன், ஸ்வத்வர: - நல்ல யாகங்களைச் செய்தவனுகிறுன். இதி - என்று, கதித: - உரைக்கப்பட்டிருக்கிறுன், அஹிர் புத்ந்யோபி - ருத்திரனும், அந்வவாதீத் - இதைத்தொடர்ந்து பேசினுன். எதத் - இது, இந்த சரணுகதி, திவிஷதாம் - தேவர்களுடைய, உத்தமம் குஹ்யம் - உத்தமமான ரஹஸ்யமாக, அகணி - மதித்துரைக்கப்பட்டது, அஸௌ - இது, ஸாக்ஷாத் - நேராகவே அதாவது மற்றென்றை இடையிடாமலே. மோக்ஷாய - மோக்ஷத்துக்குக்காரணமாக, ச்ருத: - வேதங்களில் கூறப்பட்டது, து - இதுக்கு விபரீதமாக, குணுட்யே - நற்குணம் வாய்ந்த, இஹ - இந்த சரணுகதி விஷயத்தில், பாத சங்கா - விரோதத்தை சங்கிப்பது, முதா - வீண், ஹி - எனெனில். தந்நிஷ்ட : இந்த சரணுகதியைக் கைப்பற்றினவன், அந்ய நிஷ்டாந் - மற்ற உபாயங்களை ஸ்வீகரித்தவர்களை, கோடி கோட்யம் சதோபி-

கோடியிலும் கோடிபங்கைக்கொண்டு, அதிசயிதும் - மீறியிருக்க, ப்ரபு: - சக்தியுள்ளவன் ஆகிறுன்.

உரை—சரணுகதி மந்த்ரத்தை உச்சரித்ததால் மாத்திரம் மோக்ஷம் பெறமுடியாது, மேற்சொன்ன ம்ந்த்ரத்தைக் கொண்டு ஆத்மாவை எம்பெருமானிடம் அர்ப்பணம் செய்வதாகிற சரணுகதியாலேயே மோக்ஷம் கிடைக்கும் என்று முன்ச்லோகத்தில் அருளிச் செய்து - இந்தச்லோகத்தில் மற்றெரு சங்கையைத் தீர்த்து, ப்ரபத்தியின் மஹிமையை உறுதிப்படுத்துகிருர் - அதாவது - மந்த்ரோச்சாரணுதிகள் பரபத்தி வழியாகவே மோக்ஷம் தருமென்றீர். இப்ரபத்தியும் பக்தியோகத்தின் வழியாகவே மோக்ஷம் தரவல்லது என்று சொல்லுகிறேம் என்ற பூர்வபக்ஷம் வர அதுக்கு உத்தரம் அருளிச்செய்கிருர். தைத்திரீயோபநிஷத்தில் இச்சரணுகதி, மற்ற தவங்களைக் காட்டிலும் மிகச்சிறந்தது என்று கூறியிருக்கிறது - ரிக் வேதத்திலும் இச்சரணுகதி உயர்ந்ததொரு யாகம் என்று கூறியதை ருத்திரன் அஹிர்புத்ந்ய ஸம்ஹிதையில், ஸமித் முதலான பொருட்களைக்கொண்டு செய்யப்படுகிற யாகங்களை விட்டு நம: என்ற பதமடங்கிய துவய மந்த்ரத்தால் செய்யப்படும் சரணுகதி என்னும் யாகம் செய்தவன் ஸ்வத்வரன் அதாவது நல்லயாகம் செய்தவனுகிருன் என்று பின்தாங்கிப் பேசினுன். தைத்திரீயோபநிஷத்திலேயே இந்த பரந்யாஸம், தேவர்களுடைய உத்தமமான ரஹஸ்யம் என்றும் புகழ்ந்து பேசப்பட்டிருக்கிறது. ஸ்ரீபாஞ்சராத்திரம் லக்ஷ்மீதந்திர ஸம்ஹிதையில் கர்மயோக, ஞானயோக, பக்தியோகங்களை அனுஷ்டிப்பவர் அனைவரும், சரணுகதி நிஷ்டனுடைய கோடியிலும் கோடியில் ஒரு பங்குக்குக்கூட ஒப்பாகமாட்டார்கள் என்று ப்ரபந்ந

னுடைய மஹிமை பரக்கப் பேசப்பட்டது. ஆனால் தைத்திரீயோபநிஷத்தில், "ஓமித்யாத்மாநம் யுஞ்ஜீத" என்று ப்ரணவத்தைக்கொண்டு சரணாகதியை அநுஷ்டிக்க விதித்திருப்பதால் இது சர்வாதிகாரமாகுமோ? துவயத்தை சரணாகதி மந்த்ரமாகக் கூறியது விரோதிக்காதோவென - அநதிகாரிகளுக்கு ப்ரணவோச்சாரணம் கூடாததாயினும், ஆகமத்தில் விதிக்கப்பட்ட மந்த்ரத்தைக்கொண்டு சரணாகதி ப்ரயோகம் தகும் என்று அறிக. ஆனாலும் வேதோக்தமான இக்கிரியையை வேதாநதிகாரிகள் செய்யவடுக்குமோவென்றால் - "ஸத்யம் வத, தர்மம் சர" இது முதலிய பொது தர்மங்கள் வேதத்தில் விதிக்கப்பட்டிருப்பினும் இவற்றை அனைவரும் அநுஷ்டிப்பதுபோல் இதையும் அநுஷ்டிக்க விரோதமில்லை. அனைவருக்கும் சரணமானவன் நண்பன் "என்னும் அனைவருக்கும் சரண்யன்" இது முதலிய வசனங்களில் இக்கொள்கை கருதப்பட்டது - ஆதலால் இச்சரணாகதி பக்தியோகத்துக்கு எதிர்தட்டாக நின்று ஸ்வதந்திரமாகவே மோக்ஷத்தைத்தரவல்லது, பக்தியோக நிஷ்டர்களைக்காட்டிலும் சரணாகதி நிஷ்டன் மிகுந்த கௌரவம் வாய்ந்தவன் என்று தாத்பர்யம்.

## दशमः श्लोकः

## பத்தாவது ச்லோகம்

नानाशब्दादिभेदादितितु कथयता सूत्रकारेण सम्यक् न्यासोपासे विभक्ते यजनहवनवच्छब्दभेदाद भाक्तात्॥ आख्यारूपादिभेदः श्रुत इतरसमः किञ्च

भिन्नोधिकारः शीघ्रप्राप्त्यादिभिः स्याज्जगुरितिच मधूपासनादौ व्यवस्थाम् ।

व्या—सन्तु भाष्योक्त भक्त्यङ्गभूत प्रपत्तिप्रशंसापराण्येतानि वाक्यानि ; गुणोपसंहारपादे प्रपत्तेः स्वतन्त्र विद्यात्व स्थापनाभावात् ; अनन्यथासिद्ध समानन्यायाभावाच्च ; इति शङ्कायां प्रपदनस्य मोक्षं प्रति पृथगुपायत्वोपपादनं तत्रैव सुस्पष्टमित्याह—नानाशब्दादीति—अभाक्तात्—अनौपचारिकादित्यर्थः । सद्विद्या दहरविद्यादिषु शब्द भेदोहि तत्तद्गुणविशिष्ट ब्रह्मविषय प्रत्ययावृत्यभिधायित्वरूपेणोपपाद्यः इहतु, यागदानहोमादिवत् अपर्यायतयैव व्युत्पत्तेः सिद्ध इति भावः न्यासविद्येत्याख्या अर्थस्वभावात् अत्र अभयप्रदानसामर्थ्यविशिष्ट परमकारुणिकतया निरपेक्षरक्षकत्वं रूपम् । आदिशब्देन परिकर प्रकरणयोः ग्रहणम्—इतरसमः—विद्यान्तरसमः—किञ्चेत्यादि, प्राग्दर्शिताधिकारिभेदस्मारकम् । स्वातन्त्र्येण मोक्षोपायत्वेन सद्विद्यादे र्व्यावृत्त इहाधिकारो नस्यादिति शङ्कायां मधुविद्याद्युदाहरणम् भाष्येतु प्रपत्तेः भक्त्यङ्गत्वोक्तिः नस्वातन्त्र्यबाधिका । विषयभेदादुभयाधिकारयोगिषु क्वचिदन्यतरोक्तेर विरोधात् ।

பதவுரை—சப்தாதிபேதாத் - பரமாத்மாவின் விசேஷணங்களைக் கூறுகின்ற, ஸத் என்னும் பூமா என்னும், ஜகத் காரணம் என்னும் அபஹதபாப்மா என்னும் சொற்கள் வெவ்வேறாகவிருப்பதால், நாநா - ஸத்வித்யா, தஹரவித்யா, முதலான ப்ரஹ்மவித்யைகளும்,

வெவ்வேறு, இதி - என்று, கதயதா - சொல்லுகின்ற, ஸூத்திரகாரேண - ப்ரம்ம சூத்திரகாரரால், ந்யாஸோபாஸே - சரணுகதியும், பக்தியோகமும், யஜநஹவநவத் - யாகத்தைக்கூறுமிடத்தில் யஜநம் என்னும், ஹவநம் என்னும் தாநம் என்னும் இவைபோன்ற, அபாக்தாத் - ஔபசாரிகமல்லாத - அதாவது வெளிப்பொருளைக்காட்டிலும் வேருன உட்பொருளைக் கொள்ளாத - சப்தபேதாத் - சொற்களின் வேற்றுமையால், ஸம்யக் நன்ருகவே - அதாவது யாதொரு ஸந்தேஹத்துக்கும் இடமில்லாமல், விபக்தே - பிரிக்கப்பட்டிருக்கின்றன. ஆக்யாரூபாதிபேத: - ஆக்யா - ந்யாஸவித்யா எனப் பெயரிலும் ரூப - பரமகாருணிகனுகையால் மற்றென்றை எதிர்பாராமல் இரக்ஷிப்பவன் என்ற ரூபத்திலும், ஆதி - அங்கங்கள், ப்ரகரணங்கள் இவற்றிலும், பேத: - வேற்றுமையானது, இதரஸம: - மற்ற வித்யைகளுக் கொப்பாகவே, ச்ருத: - இங்கும் கூறப்படுகின்றது. கிஞ்ச - இன்னமும், சீக்ரப்ராப்த்யாதிபி: - சீக்கிரம் பயன்பெறுவது முதலியவற்ருல் அதிகார: - அதிகாரம், பின்ன: - வேறுபட்டதாக, ஸ்யாத் - இருக்கலாம், இதிச - இவ்விதமே - மதுபாஸநாதௌ - மதுவித்யை முதலானவிடத்திலும், வ்யவஸ்தாம் - நிபந்தனையை, ஜகு: - சொன்னூர்கள்.

உரை —முன்ச்லோகத்தில், சரணுகதி, பக்தியோகத்தைப் போலவே நேராகவே மோக்ஷத்தைத் தருமுபாயமென்று கூறினர். அப்படிச் சொன்னவிடத்தில், ப்ரஹ்மசூத்திரத்தில் குணோபஸம்ஹாரபாதத்தில் இப்ரபத்தியை தனிப்பட்டதொரு, மோக்ஷோபாயமாக கூருமையால் ப்ரபத்தியை மோக்ஷோபாயமாகத் துதிக்கின்ற வாக்கியங்கள் எல்லாம் ஸ்ரீபாஷ்யத்தில் மோக்ஷோபாய மாகக்கூறப்

பட்ட அங்கப்ரபத்தியை பற்றினவை என்ற ஆக்ஷேபம் தோன்ற, சூத்திரத்திலேயே இப்ரபத்தி தனி உபாயம் என்று தெளிவாய் உறைக்கப்பட்டிருக்கிறதுஎன்று கூறுகிறார், ப்ரஹ்மசூத்திரத்தில் சப்தாதிபேதாதி கரணத்தில், "நாநா சப்தாதிபேதாத்," என்பதொரு சூத்திரமுண்டு. இது, மோக்ஷோபாயமாக விதிக்கப்பட்ட ப்ரஹ்மவித்யைகள் எல்லாம் சேர்ந்து ஒரே வித்யையா? அல்லது வேவ்வேறு? என்று ஸம்சயம்வர, அந்த ஸம்சயத்தை நீக்குகிறது.

பதவுரை :—நாநா - ப்ரஹ்மவித்யைகள் வெவ்வேறு, சப்தாதிபேதாத் - அவற்றை விதிக்கின்ற சொற்களும், உபாசிக்க வேண்டிய பரமாத்மாவின் குணங்களும், செய்யும் முறைகளும், எண்ணிக்கையின் கணக்குகளும், அவ்வவற்றுக்குத் தனித்தனியே பெயர்களும், வெவ்வேறாக இருப்பதால் என்று. இதில் விதிக்கின்ற சொற்களில் வேற்றுமை எப்படி என்று விசாரிக்கும் போது - வேத, உபாஸீத, முதலான விதிச்சொற்களுக்கு, பொருள் ஒன்றேயாதலால், விதிக்கப்பட்ட வித்யைகள் ஒன்றேயல்லாமல் வெவ்வேறு என்று கூறத்தரமல்லவென்று பூர்வபக்ஷம் தோன்றியது. என்எனில் - ஒரே பொருளைக்கூறும் பல சொற்களுக்கு பர்யாயபதங்கள் எனப் பெயர். குடம் என்ற பொருள் ஒன்றையே, கடம், கும்பம், கலசம், இச்சொற்கள் கூறுகின்றன. இவை பர்யாய பதங்கள். பர்யாய பதங்களால் கூறப்பட்ட பொருள் ஒன்றேயல்லாமல் வெவ்வேறு என்று கொள்ள இயலாது. குடம் இருக்கிறது, கும்பம் இருக்கிறது, கலசம் இருக்கிறது என்று கூறினால் இருக்கும் பொருள் ஒன்றே என்றல்லவோ தோற்றம். அது போல் இங்கும் "வேத" "உபாஸீத" என்று பர்யாயபதங்

களால் விதிக்கப்பட்ட பொருள் ஒன்றேயாகும் என்று. இப்பூர்வபக்ஷத்துக்கு ஸமாதாநம் ஸ்ரீ பாஷ்யகாரர் இரண்டு விதமான அபிப்ராயத்தைக்கொண்டு நிர்வகித்திருக்கிறார். அவற்றில் ப்ரகாசமாய் கூறியது ஒன்று, வெளிக் காட்டாமல் மனதில் வைத்திருப்பது மற்றொன்று. வெளிப் படையாய் கூறியது என்ன வென்றால் - வேத- உபாஸீத, முதலான விதிச்சொற்கள் பர்யாயபதங்கள் ஆயினும், அவ்வோ வித்யைகளில் உபாசிக்கப்பட வேண்டிய பரமாத்ம குணங்கள். ஒன்றில் அபஹதபாப் மத்வம் - வினைப்பயன் கலசாமை, மற்றொன்றில் ஜகத் காரணத்வம் - உலகமனைத்துக்கும் காரணமாக விருத்தல், முதலியவை வெவ்வேறாக விருப்பதால், ஸத்வித்யை, தஹர வித்யை, சாண்டில்யவித்யை, வைச்வா நரவித்யை, என்று கூறுமவை யெல்லாம் வெவ்வேறு தான். ஒன்றல்ல என்று. மற்றொரு ஸமாதாநம், ஸ்ரீபாஷ்யகாரர் வெளிப்படுத்தாமல் மனதிலேயே வைத்துக்கொண்டு பேசியிருக்கிறார். அதாவது - நாநா - மோக்ஷோபாயமான ப்ரஹ்ம வித்யை ஒன்றல்ல - வெவ்வேறு தான். ஏன் எனில் - சப்தாதி பேதாத் - ச்ருதியில் ''வேத'' ''உபாஸீத'' என்று உபாஸனையையும், ப்ரபத்யே, என்று சரணாகதியையும் விதித்திருப்பதால் பக்தியோகம் என்றும் ப்ரபத்தியோகம் என்றும் இவ்விரண்டும் தனித்தனியே மோக்ஷோபாயம் என்று. இவ்விரண்டில் எது மிகப்பொருத்த முள்ளது என்று பார்க்குமளவில் - இரண்டாவது சொன்ன ஸமா தாநமே சூத்திரகாரருடைய மநோபாவத்தில் நன்கு பொருந்தியது என்று கொள்ள அநேக காரணங்கள் உண்டு. அதாவது - முதல் சொன்ன ஸமாதாநத்தில் சப்தாதி பேதாத் என்ற ஹேதுவை, ப்ரயாசப்பட்டு

பொருத்துதல் செய்யவேண்டிவருகிறது. வேத, உபாஸீத என்ற சொற்கள் ஒரே பொருளைக் கூறுகின்றவையாயினும் அந்தந்த உபாஸனையில் கூறப்பட்ட குணங்கள் வெவ்வேறு கையால், விசேஷணம் வேறுபட்டால் விசேஷ்யம் வேறு படும் என்ற ந்யாயத்தைக்கொண்டு, அபஹத பாப்மத்வம் அடங்கிய உபாஸநம் வேறு; ஜகத்காரணத்வம் அடங்கிய உபாஸநம் வேறு என்று வேற்றுமை கற்பிக்கவேணும். இதுவேறு கதியில்லாத விடத்தில் கையாளப்பட வேண்டிய முறை - இரண்டாவதாகக்கூறின ஸமாதானத்திலோ வென் றால் இவ்வித ப்ரயாஸ மின்றிக்கே, நேர்வழியாகவே சூத்திரத்திற்கு பொருள் ஏற்படுகிறபடியால் இதுவே சிறந்ததென கொள்ளத்தகும். இவ்விரண்டாவது ஸமாதா நமே சூத்திரகாரருக்கு ஸம்மதமானது என்றும் கொள்ளத் தட்டில்லை. உபநிஷத்தின் கருத்தை விளக்குவதற்கு வந்த பகவத்கீதையிலும், பக்தியோகத்தை "பஜஸ்வமாம்" என்னும், ப்ரபத்தியை "சரணம் வ்ரஜ" என்னும் விதித் திருப்பது இதுக்கு சான்றாகும். விதியைக்கூறும் சொல்லில் வேற்றுமை இவ்விதமிருக்க, சப்தாதி என்கிற ஆதிபதத்தால் வித்யையின் பெயரில் வித்யாஸமும், அதாவது - பக்தி, ப்ரபத்தி, என்றதும், பகவத்ரூபத்தில், ஒன்றில் அபஹதபாப்மத்வம், முதலானதும், மற்றொன் றான ப்ரபத்தியில் பரமகாருணிகனாகையால் முமுக்ஷுவி னிட மிருந்து ஒன்றையும் எதிர்பாராதவனாய் மோக்ஷந் தருவது என்றதும், வேறுபடும், பக்திக்கு வர்ணாச்ரமதர் மாதிகள் பரிகரங்கள். பிரபத்திக்கு ஆநுகூல்ய ஸங்கல் பாதிகள் அங்கங்கள் என்ற வித்யாஸமும், ப்ராரப்த கர்மத்தை அநுபவித்து ஒழிக்க சக்திவாய்ந்தவன் பக்தி யோகத்துக்கு அதிகாரி, ப்ராரப்தகர்மத்தையும் விலக்கி,

இந்த சரீர முடிவிலேயே மோக்ஷம் பெறவிரும்புமவன் பிரபத்திக்கு அதிகாரி என்றும், இப்படி வித்யாஸங்களை எளிதில் அறியலாமாதலால் இந்த ஸூத்திரம் பக்தியையும் சரணாகதியையுமே கூறுகின்றது என்று கொள்ளத்தகும். ஆனல் ஸ்ரீபாஷ்யத்தில் இப்பிரபத்தியை ஏன் விளங்கக் கூறவில்லை. என்ருல் - கூறவில்லை என்பது உண்மையே - ஆயினும் இரண்டிலொன்றைக் கூறியதால் மற்ருென்று இல்லை எனத்தகாது. ஸ்ரீபாஷ்யகாரர் இரண்டாவது ஸமாதானத்தையே உள்கருத்தாகக்கொண்டார் என்று நிச்சயமாய் கூறுவோம்.

## एकादशः श्लोकः

## பதினொன்ருவது ச்லோகம்

यत्किञ्चिद्रक्षणीयं तदवननिपुणे न्यस्यतोऽकिञ्च
नस्य प्रस्पष्टं लोकदृष्ट्याप्यवगमितइह प्रार्थनाद्यङ्गयोगः ॥
तस्मात् कर्माङ्गकत्वं व्यपनयति परापेक्षणाभाववादः
साङ्गत्वेष्टाङ्गयोग व्यवहृतिनयतः षड्विधत्वोपचारः ॥

व्या—अङ्गत्वमेव प्रपत्तेरिति पक्षः परिहृतः। अथ स्वातन्त्र्येपि निरङ्गकत्वपक्षं परिहरति—यत्किञ्चिद्रक्षणीयमिति—अवगमितः— "तदेकोपायतायाच्ञा" "अप्रार्थितो नगोपायेत्" "शरणञ्च प्रपन्नानाम्" इत्यादिभिरिति शेषः। तस्मादित्यादिना—"प्रपत्तेः क्वचिदप्येवं परापेक्षा नविद्यते" इत्यस्य निरङ्गकत्वशङ्का व्युदासः तथा—षड्विधा शरणागतिरिति वचनात् आग्नेयादिषदकवत्

आनुकूल्यसंकल्पादि षट्कं संभूयैकं कारणं स्यादित्यत्रोत्तरं— साङ्गेत्वित्यादि, "न्यासः पञ्चाङ्गसंयुतः" इति व्यवस्थापकवच-नानुगुणम् अंगाङ्गि समुच्चयेन षड्विधत्ववचनं नेयमितिभावः

பதவுரை—யத்கிஞ்சித், யாதொரு வஸ்து, ரக்ஷணீயம் - இரக்ஷிக்கத்தக்கதோ, தத் - அதை, அவநநிபுணே - இரக்ஷிக்க சக்தியுள்ளவனிடத்தில், ந்யஸ்யத: - அடைக்கலமாய் கொடுக்கின்ற, அகிஞ்சநஸ்ய - ஏழைக்கு, ப்ரார்தநாதி, பிரார்த்தனை முதலான, அங்க - அங்கங்களின், யோக: - சேர்க்கை, இஹ - இந்த சரணகதி விஷயத்தில், லோகத்ருஷ்ட்யாபி - உலகவழக்கத்தாலும், அவகமித: - அறிவிக்கப்பட்டது, தஸ்மாத் ஆதலால், பராபேக்ஷணபாவவாத: - மற்றொன்றை அபேக்ஷிப்பதில்லை என்று கூறுவது, கர்மாங்ககத்வம் - கர்மங்களை அங்கமாகக்கொண்டிருப்பதை, வ்யபநயதி, விலக்குகின்றது. து - ஆனல் - ஸாங்கே - அங்கங்களோடுகூடின பிரபத்தியில், அஷ்டாங்க யோக வ்யவஹ்ருதிநயத: - அஷ்டாங்கயோகம் என்று சொல்லுவதுபோல், ஷட்விதத்வோபசார: - ஆறுவிதம் என்று கூறினது ஔபசாரிகம் - அதாவது - கௌணப் பொருளாகும்.

உரை—முன் ச்லோகத்தில் ப்ரபத்தி பக்திக்கு அங்கமே ஒழிய, சுதந்திரமான மோக்ஷோபாயமாகாது என்ற பக்ஷத்தை கண்டித்தார். அதன்பின், சுதந்திரமான ப்ரபத்தியை ஒப்புக்கொண்டபோதிலும், அதுக்கு அங்கங்கள் ஒன்றுமில்லை, என்ற பக்ஷத்தை கண்டிக்கிறார் இந்த ச்லோகத்தில்.

ஒரு பொருளைக்காப்பாற்ற சக்தியில்லாதவன் அப்பொருளை, சக்தியுள்ள ப்ரபுவினிடம் அடைக்கலம் வைப்

பது, சாஸ்திரங்களில் கூறப்பட்டதொரு உபாயம் மாத்திர மல்லாமல், உலக வழக்கத்திலும் காணப்பட்டதே. அப்படி அடைக்கலம் வைக்கும்போது, எனது பொருளை இரக்ஷித்துத் தரவேணும் என்ற வேண்டுதல் செய்வது முதலிய அங்கங்கள் இருந்தே தீரவேணும். இவ்விஷயம் சாஸ்திரங்களிலும் பலவிடங்களில் கூறப்பட்டது - ‘‘ ததேகோ பாயதாயாச்ஞா ப்ரபத்தி: ’’ - ப்ரபத்தியாவது - அப்பரமபுருஷனே உபாயம் என்று யாசிப்பதே ’’ என்றும், நாம் யாசிக்காவிடில் அவன் ரக்ஷிக்கமாட்டான் என்றும் சாஸ்திரங்கள் கூறுகின்றன. ஆனல் ‘‘ ப்ரபத்தே: க்வசிதப்யேவம், பராபேக்ஷா நவித்யதே ’’ என்பதொரு வசநமுண்டு. அதில் ப்ரபத்திக்கு எவ்விஷயத்திலும் பராபேக்ஷை இல்லை. அதாவது மற்ருென்றை தனக்குத் துணையாகக் கொள்வதில்லை என்று கூறப்பட்டது. அப்போது ப்ரபத்திக்கு அங்கம் ஒன்றுமில்லை என்று ஏற்படுகிறதே என்ருல் - இவ்வசநம், பக்தியைப்போல் இப்ரபத்தி வர்ணுச்ரம தர்மங்களை அங்கமாகக் கொண்டதில்லை என்பதை தெரிவிக்குமேயல்லாமல், வேறு அங்கங்கள் இல்லை என்று பொருள்படுத்தாது. ஆதலால் ப்ரத்திக்கு ஆநுகூல்ய ஸங்கல்பம் முதலான அங்கங்கள் ஐந்தும் இருந்தே தீரவேணும். ஆனல் - ‘‘ ஷட்விதா சரணுகதி: ’’ - சரணுகதி ஆறுவித அங்கங்கள் கொண்டது என்று சொல்லுகிற வசநம் விரோதிக்குமே என்ருல் - அது அங்கங்கள் ஐந்து, அங்கியானப்ரபத்தி ஒன்று, இவற்றைச் சேர்த்து ஆறு என்று சொன்னபடி. அப்படிச் சொல்லுவது பொருந்துமோ வென்ருல் - யோகசாஸ்திரத்தில் - யமம், நியமம், ஆஸநம், ப்ராணுயாமம், ... ப்ரத்யாஹாரம், த்யாநம், தாரணு, என்ற

ஏழுங்கங்களோடு, ஸமாதி, என்ற அங்கியையும் சேர்த்து அஷ்டாங்கயோகம் என்று கூறப்பட்டிருப்பதுபோல் இங்கும் அங்கியைச் சேர்த்து ஆறுவிதம் என்று சொன்னது விரோதிக்காது. ஔபசாரிகமாக சாஸ்திரங்களில் இவ்விதம் உரைப்பதுண்டு. "ந்யாஸ: பஞ்சாங்கஸம்யுத:" என்று மற்றொருவிடத்தில் கூறியதை ஒத்திட்டுப்பார்த்து முன்சொன்னபடியே பொருள் கொள்வது உசிதம். ஐந்து அங்கங்களாவது :

(1) பகவானுக்கே அநுகூலமாக இருத்தல்,

(2) அவனுக்கு விரோதத்தை தவிர்த்தல்,

(3) அவன் இரக்ஷிக்கப் போகிறான் என்று நம்பிக்கை கொண்டிருத்தல்,

(4) நீயே ரக்ஷிக்க வேணும் என்று பிரார்த்தித்தல்,

(5) அவனைத் தவிர்த்து வேறு கதியின்றி இருத்தல் என்பவையாம்.

## द्वादशः श्लोकः

## பன்னிரண்டாம் ச்லோகம்

**पञ्चाप्यङ्गान्यभिज्ञाः प्रणिजगुरविनाभाव भाञ्जि प्रपत्तेः कैश्चित् संभावितत्वं यदिह निगदितं तत् प्रपत्युत्तरं स्यात् । अङ्गेष्वङ्गित्ववादः फलकथनमिह द्वित्रिमात्रोक्तयश्च प्राशस्त्यं तत्रतत्र प्रणिदधति ततः सर्ववाक्यैककण्ठ्यम् ।**

व्या—एवमङ्गाङ्गिभावः सिद्धः - तत्र अवान्तरवैयाकुलीं शमयति—पश्चाप्यङ्गानीति—प्रपत्तिदशायां प्रातिकूल्यवर्जनाद्यभावे सांगस्योपायस्य वैकल्यं स्यात् - पश्चात्तु प्रातिकूल्यस्य संभवेपि कृतस्योपायस्य न वैकल्यम् ; किन्तु प्रत्यवायपरिहारार्थम् यथार्हम प्रतिविधानमेव कार्यम्

" तथा पुंसाम विस्रम्भात् प्रपत्तिः प्रच्युताभवेत् "

इत्येतदपि तात्कालिक विस्रम्भ वैकल्याभिप्रायम् । उत्तरकाले सतोपि विश्वासस्य पूर्वकृतप्रपत्यङ्गत्वाभावेन तद्विरहे प्रपत्तिप्रच्यवनायोगात् । एवञ्च ब्रह्मास्त्रन्यायदृष्टान्तोप्यत्र योग्यांशे स्थाप्यः । अन्यथा अदिप्रसङ्गात् एतेन—

" उपायापाय संयोगेनिष्ठयाहीयतेऽनया "

इत्येतदपि गतार्थम् । तात्कालिकोपायापाय संयोगस्य प्रपत्तिविरोधित्वे तातपर्यात् । नच आनुकूल्य संकल्पस्याङ्गत्वेन श्रवणात् संकल्पितकरणमप्यङ्गम् ; तथाश्रुत्यभावात । यथाश्रुति संकल्पमात्रस्यांगत्वे सङ्कल्पिताचरणस्य अंगत्वकल्पनानुपपत्तेश्च ।

"आनुकूल्येतराभ्यांतु विनिवृत्तिरपायतः" इत्यनेनापि अपायनिवृत्तौ सङ्कल्पविशेषस्य तात्कालिकोपयोगः प्रदर्श्यते। अत्रत्यानुकूल्य शब्दोहि तत्संकल्पप्रतिपादनपरः " आनुकूल्यस्य संकल्पः" इत्यादि सिद्धानुवादत्वात् । नच " उपायापाये " त्यादौ प्रपत्तिनिष्ठाहानिः विवक्षिता, किन्तु उपायापायत्यागविशिष्ट मध्यमवृत्तिहानिः । विशेषणा भावेपिहि विशिष्टाभावः सिध्यति । अतएवहि तत्र

"अपायसंप्लवे सद्यः प्रायश्चित्तं समाचरेत्" इत्यादिना तावन्मात्रनिमित्तं प्रायश्चित्तमेव विधीयते ; न तु पूर्वकृतां प्रपत्तिं प्रच्युतामभिप्रेत्य तत्फलार्थं पुनः प्रपत्तिः।

பதவுரை :—அபிஜ்ஞா: - வித்வான்கள், பஞ்ச அங்காங்யபி - ஆநுகூல்யஸங்கல்பம் முதலான ஐந்து அங்கங்களையும், ப்ரபத்தே: - ப்ரபத்திக்கு, அவிநாபாவபாஞ்சி - விட்டுப் பிரியாமல் இருப்பதாக அதாவது - ப்ரபத்தி செய்யும் காலத்தில் அவச்யம் இருக்கவேண்டியவைகளாய், ப்ரணிஜகு: - கூறினார்கள். யத் - யாதொன்று, இஹ - இந்த ஐந்து அங்கங்களுக்குள், கைச்சித் - சில அங்கங்களால் ஸம்பாவிதத்வம் - தன்னடைவாகவே நேர்ந்தமை, அதாவது அவச்யமில்லாமல், தானுகவே நேரக்கூடியதாக விருக்கை. நிகதிதம் - சொல்லப்பட்டதோ, தத் - அது, ப்ரபத்யுத்தரம்—ப்ரபத்திக்குப்பின், ஸ்யாத் - இருக்கக்கூடும். இஹ - இந்த சரணுகதியில், அங்கேஷு, அங்கங்களில், சிலவற்றை அங்கித்வவாத: - அங்கியாகக் கூறியதும், பலகதநம் - சில அங்கங்களாலேயே மோக்ஷம் கிடைக்கும் என்று கூறியதும், த்வித்ரிமாத்ரோக்தயச்ச - ஐந்தில், இரண்டு அல்லது மூன்றைமாத்திரம் கூறியதும், தத்ரதத்ர - அந்தந்த அங்கங்களில், ப்ராசஸ்த்யம், - மேன்மையை, பெருமையை, ப்ரணிததி - பொருளாகக்கொண்டன. தத: - ஆதலால், ஸர்வவாக்யைககண்ட்யம் - எல்லா வாக்கியங்களுக்கும் ஒற்றுமை உண்டு.

உரை—இன்னது அங்கம், இன்னது அங்கி என்று தீர்மானித்தார் கீழ். இந்த அங்காங்கி பாவத்தில் வரும் கலக்கங்களை போக்குகின்றார் இந்தச்லோகத்தில் - சரணுகதி செய்யும்போது ப்ராதிகூல்யவர்ஜநம் முதலான

அங்கங்கள் இல்லையானால் சரணாகதி பூர்த்தியாகவில்லை என்று கொள்ளவும் - சரணாகதிக்குப்பின் மேற்சொன்ன அங்கங்களைத் தவிர்ந்தால், ஏற்கனவே செய்து முடிந்து போன உபாயத்துக்கு அழிவு இல்லை. ஆனாலும் தோஷமுண்டு. அதனால் பகவந்நிக்ரஹம் ஏற்படும். அதற்காக, தக்கபடி பரிஹாரம் செய்துகொள்ளவேணும். 'மஹாவிச்வாஸம் இல்லையானால் ப்ரபத்தி நழுவிப்போகும் என்று சொல்லுகிற வசநத்துக்கும் ப்ரபத்தி செய்யுங்காலத்தில் மஹாவிச்வாஸம் இருந்தே தீரவேணும் என்றுதான் தாத்பர்யம். ப்ரபத்திக்குப்பின் தொடர்ந்து நிற்கிற மஹாவிச்வாசம் முன்செய்த ப்ரபத்திக்கு அங்கமாகாது. ஆதலால் பிற்காலத்தில் மஹாவிச்வாஸம் இல்லாமற் போனாலும் செய்த ப்ரபத்திக்கு குறைவு இல்லை. ப்ரபத்தியை ப்ரஹ்மாஸ்திரத்துக்குச் சமானமாகச் சொன்னதையும் முன்சொன்னதுக்கு விரோதமின்றி வைத்துக்கொள்ளவேணும். அப்படியே, உபாயமும் அபாயமும் சேர்ந்தால், அதாவது - ப்ரபத்தியோடு ப்ரபத்தி விரோதியான அபராதங்கள் சேர்ந்தால், ப்ரபத்தி நிஷ்டை குலைந்துவிடும் என்று சொல்லுகின்ற வசநத்துக்கும் இப்படியே தாத்பர்யம்.

இங்கு மற்றொரு ஆக்ஷேபம் - ஆநுகூல்ய ஸங்கல்பம் அங்கமல்லவா - ஸங்கல்பமாவது - ஒரு கார்யத்தைச் செய்யக்கடவேன் என்று உறுதி கூறுதல். ப்ரபத்திக்குப் பின்னும் இச்சங்கல்பம் நிலை நின்றாலல்லவோ இந்த அங்கபூர்த்தி, ப்ரபத்திக்குப்பின் அங்கம் குறைந்தாலும் செய்த ப்ரபத்தி குலையாது என்பது எப்படி? என்றால் - ச்ருதியில் இவ்விதம் கூறப்படவில்லை. ஸங்கல்பம் செய்து கொள்ளவேண்டியதை அங்கமாகக் கூறியிருக்கிறதேயல்லா

மல் ஸங்கல்பம் செய்துகொண்ட கார்யத்தை நிறைவேற்றுவது அங்கம் என்று சொல்லுவது யுக்திக்குப் பொருந்தாது. ப்ரபத்தி செய்யுங்காலத்திலும் கூட அங்கங்களும் நிறைந்து, அபராதங்களும்கூடியிருக்குமானல் ப்ரபத்திக்கு ஹாநி ஏற்படாது. அங்கங்கள் நிறைந்த அங்கி அதாவது ப்ரபத்தி நிலேத்து விட்டபடியால்.

இதன் மீது மற்ருெரு ஆக்ஷேபம் - "உபாயாபாயஸம்யோகே நிஷ்ட்டயா ஹீயதேநயா" உபாயமும் அபாயமும் கலந்தால் நிஷ்டை குலேயும் என்ற வசநத்துக்கு என்ன கதி? என்ருல் - நிஷ்டை குலேயும் என்பதற்கு ப்ரபத்தி நிஷ்டை குலேயும் என்று தாத்பர்யமில்லே. பின்னேயோவெனில்—ப்ரபத்தி நிஷ்டனுக்கு 'மத்யமவ்ருத்தி' என்ற ஒரு நிலே கூறியிருக்கிறது. அதாவது - உபாயத்தையும் அபாயத்தையும் தவிர்ந்தவன் என்று. அது எப்படி என்ருல் - உபாயம் = காம்யகர்மங்கள் - அவற்றை விட்டவன் உபாயத்யாகி. அபாயம்=பகவதபசார, பாகவதாபசாரங்கள் - அவை இல்லாதவன் அபாயத்தை விட்டவன் ஆகிருன். உபாயமும் அபாயமும் கலந்தவனுக்கு, உபாயாபாயங்களே விட்டவன் என்ற மத்தியம நிலே இல்லே. உபாயத்தை விட்டாலும் அபாயத்தை விடாதபடியால், "விசேஷணுபாவே விசிஷ்டாபாவ:" அதாவது விசேஷணம் இல்லேயானல் விசிஷ்டன் இல்லே. தண்டம் இல்லேயானல் தண்டீ எப்படி இருப்பான்? என்ற ந்யாயத்தைக்கொண்டு மத்தியம நிலே ஏற்படவில்லே என்று சொன்னபடி. இவ்வர்த்தத்தை, த்யக்த்வோபாயாநபாயாந் என்ற 19-வது ச்லோகத்தில் காண்க. இப்படிப்பட்ட மத்தியம நிலே இல்லேயானல் ப்ரபத்தி எப்படி கைகூடும்? என்ருல்—அந்த அபாயம் கலந்ததுக்கு மாத்திரம் பரிஹாரம் செய்யவேண்டியது

அவச்யம். அப்போது ப்ரபத்திக்கு ஹாநி இல்லை. இப்பொருள்—"அபாய ஸம்ப்லவே ஸத்ய: ப்ராயச்சித்தம் ஸமாசரேத்" என்ற வசநத்தால் ஏற்படுகிறது. அதாவது - அபாயம் கலந்தால் உடனே அதுக்கு ப்ராயச்சித்தம் செய்ய வேணும் என்று. அந்தப்ராயச்சித்தமாவது - புந: ப்ரபத்தியே - இவ்வசநம் இந்த மத்தியம வ்ருத்தியில் ஒருபாகமான அபாயக்கலசலுக்கு மாத்திரம் பரிஹாரம் விதித்ததே யல்லாமல், - அபாயம் கலந்ததால் முன்செய்த ப்ரபத்தி நழுவி விட்டதாகக்கருதி, அதற்காக புந:ப்ரபத்தியை விதிக்கவில்லை. இப்படி அங்காங்கிகளைக் கூறுகின்ற வசநங்களுக் கெல்லாம் ஒன்றுக்கொன்று விரோதமின்றி ஒற்றுமைப் படுத்தி பொருள் கொள்ளவேண்டியது.

## त्रयोदशः श्लोकः

## பதின்மூன்றுவது ச்லோகம்

रक्षापेक्षा स्वसाध्यप्रणयवति भरन्यास आज्ञा दिदक्षे दृष्टा नात्र प्रपत्तिव्यवहृतिरिह तन्मेळनं लक्षणं स्यात् (मेळने इति पाठान्तरम्) गेहागत्यादिमात्रे निपततु शरणागत्यभिख्योपचारात् यद्वानेकार्थभावात् भवतिच विविधः पालनीयत्वहेतुः

व्या—प्रस्तुते मुख्योपचारप्रयोगव्यवस्थापनाय प्रपत्तिलक्षणं शोधयति रक्षापेक्षेति—प्रणयोऽत्र याच्ञा। आज्ञा आज्ञाकरणम्। आदिशब्देन भृतिभोगादि संग्रहः (भृतिदानादि इति पाठान्तरम्) अनेकार्थ-

**भावात् शरणशब्दस्यानेकार्थरूढत्वादित्यर्थः । प्रपदनरूपत्वाभावेपि केषांचित् गृहागमनादीनां रक्ष्यताहेतुत्वं प्रसिद्धमित्यभिप्रेत्य भवति-चेत्यादिक मुक्तम् ।**

பதவுரை :—ஸ்வ - தனக்கு, ஸாஹ்ய - ஸஹாயம் செய்யவேணும் என்று, ப்ரணயவதி, யாசிப்பவனிடத்தில், ரக்ஷாபேக்ஷா - ரக்ஷிக்கவேணும் என்று வேண்டுவது இருக்கிறது. ஆஜ்ஞாதிதக்ஷே - ஏவல் செய்யும் ஊழியக் காரனிடம், - பரந்யாஸ: - பரந்யாஸம் என்ற சொல் இருக்கிறது. அத்ர - இவ்விரண்டிலும் தனித் தனியே, ப்ரபத்திவ்யவஹ்ருதி: - ப்ரபத்தி என்ற சொல், நத்ருஷ்டா - காணப்படவில்லை. இஹ - இப் ப்ரபத்தி விஷயத்தில், தன்மேளநம் - அந்த ரக்ஷாபேக்ஷை, பரந் யாஸம், இவ்விரண்டின் சேர்க்கை, லக்ஷணம், இலக்கண மாக, ஸ்யாத், இருக்கலாம். சரணாகத்ய பிக்யா - சரணாகதி என்ற பெயர், கேஹாகத்யாதிமாத்ரே - வீட்டுக்குவருவது முதலான பொருளில் மாத்திரம், உபசாராத் - முக்கியப் பொருளல்லாத, இலக்கணைப் பொருளாக, நிபதது - ஏற்படக்கூடும், யத்வா - அல்லது, அநேகார்தத்பாவாத் - சரணம் என்ற சொல்லுக்கு அநேகப்பொருள் உண்டு ஆகையால், பாலநீயத்வஹேது: - இரக்ஷிக்கப்பட வேண்டிய தற்கு காரணம், விவித: - பல விதமாக, பவதி - இருக் கின்றது.

உரை:—சரணாகதி என்பது என்ன, இது எவ்விடத்தில் முக்கியப் பொருளாக நிற்கின்றது, எவ்விடத்தில் உபசாரப் பொருள், பின் பொருள், அதாவது இலக்கணைப் பொருளாக நிற்கின்றது என்பதை நிர்மானிப்பதற்காக, சரணாகதியின் லக்ஷணத்தை சோதிக்கிறார் இந்தச் லோகத்தில்—சரணாகதி

யில் ரக்ஷாபேக்ஷை என்னும் பரந்யாஸம் என்னும் இரண்டு அம்சங்கள் உண்டு. அவற்றில் ரக்ஷாபேக்ஷையாவது - ஒருவன் மற்றொருவனை தனக்கு ஸஹாயம் செய்யவேணும் என்று வேண்டுதல், பரந்யாஸமாவது - ஏவல் தொழிலைக் கொண்டு ஜீவிப்பவனைப்போல் தன்னைக்காத்தல் செய்து கொள்ளும் சுமையை மற்றொருவனிடம் ஏற்பித்து தான் வியசன மற்றிருக்கை, இவ்விரண்டுக்கும் தனித்தனியே ப்ரபத்தி என்ற பெயர் வழங்குவதில்லை. மேற்சொன்ன இரண்டும் (ரக்ஷாபேக்ஷை. பரந்யாஸம்) கூடித்தாகில் அதுவே ப்ரபத்தியாம், சரணம் என்ற சொல்லுக்கு இரண்டு பொருள் உண்டு. 1. வீடு, 2. இரக்ஷிப்பவன், மேற்சொன்ன லக்ஷணம் இரண்டாவது பொருளைக் கொண்டு முக்கியப்பொருள் கொண்டதாகும். நமது வீட்டுக்கு வந்தவனையும் சரணாகதன் என்று கூறலாமே என்றால் - அது முக்கியப் பொருளின்றி உபசாரப் பொருளாக இருக்கத்தட்டில்லை. ஆனால் சரணம் என்ற சொல்லுக்கு வீடு என்பது முக்கியப்பொருளாக கூறியிருக்க வீட்டுக்கு வந்தவன் என்பதை உபசாரப்பொருளாக என் கூறவேணும் என்று கேள்வி தோன்ற. அதையும் முக்கியப் பொருளாகவே கொண்டாலும் விரோதமில்லை என்று ஸமாதானம் கூறுகிறார். ஒருவனை மற்றொருவன் இரக்ஷிப் பதற்கு காரணம் பலவுண்டு, பரந்யாஸம் செய்தவனைப் போல் வீட்டுக்கு வந்தவனையும் ரக்ஷிக்க வேண்டியதே, என்று.

## चतुर्दशः श्लोकः
## பதினான்காவது ச்லோகம்

आत्मात्मीयस्वरूपन्यसनमनुगतं यावदर्थं मुमुक्षोः तत्वज्ञानात्मकं तत् प्रथमम् अथविधेः स्यादुपाये समेतम् ॥ कैंकर्याख्ये पुमर्थेप्यनुषजति तदप्यर्थना हेतुभावात् स्वाभीष्टानन्यसाध्यावधिरिहतु भरन्यास भागोऽङ्गिभूतः

व्या—एवं लौकिकवैदिकसर्वप्रपत्तीनां साधारणरूपमुक्तम् अथ मोक्षैकप्रयोजनायां प्रपत्तौ सर्वनिवृत्तिधर्मसाधारणं स्वाभाविक परशेषत्वानुसन्धानादिरूपं विशेषमाह—आत्मात्मीयेति, आत्मीयम् उपायफलादि। आत्माच आत्मीयाश्चेति यावन्तोर्थाः सन्ति, प्रमाण सिद्धाः तावतां सर्वेषां भगवच्छेषत्वानुसन्धानं कार्यम्। तच्चानुसन्धानम्, उपाय दशायामपि निवृत्तिधर्मविधि स्वाभाव्यादनुवर्तते। इहचामुत्रच स्वयं प्रयोजने कैंकर्ये स्वतएव भवति। अंगिभूतभरन्यासांशस्तु नयाव दर्थम्; किन्तु, यथालोकं यावदनन्यसाध्यं स्वाभीष्टं तावत्येव भवती त्यर्थः

பதவுரை :—முமுக்ஷோ: - முமுக்ஷுவுக்கு, ஆத்மாத்மீய ஸ்வரூபந்யஸநம் - தன்னையும் தன்னைச் சேர்ந்த பொருட்களையும், பரமாத்மாவினிடத்தில் ஒப்படைப்பது, யாவதர்த்தம் - எவ்வளவு பொருட்கள் உண்டோ அவ்வளவிலும், அநுகதம் - தொடர்ந்து நிற்கும், தத் - இந்த கார்யமானது, ப்ரதமம் - முதன்முதலில், விதே: - உபாயத்தை

விதிக்கின்ற வசநஸ்வபாவத்தால், உபாயே - மோக்ஷோபா யத்தில், ஸமேதம் - சேர்ந்ததாக, ஸ்யாத் - இருக்கும், ததபி - மேலும், அர்த்தநாஹேதுபாவாத் - முமுக்ஷுவால் செய்யப்பட்ட பிரார்த்தனையின் காரணமாக, கைங்கர் யாக்யே - பகவத்கைங்கர்யம் என்ற, புமர்த்தேபி - புரு ஷார்த்தத்திலும் அதாவது பயனிலும், அநுஷஜதி - தொடர்கின்றது. இஹ - இந்த ப்ரபத்தி விஷயத்தில், அங்கிபூத: அங்கியாக இருக்கின்ற, பரந்யாஸபாக: - பரந் யாஸம் என்ற அம்சம், ஸ்வாபீஷ்டா நந்யஸாத்யாவதி: - தன்னால் விரும்பப்பட்டது, மற்றொன்றால் சாதிக்க முடியாதது எவ்வளவோ, அவ்வளவிலேயே நிற்கும்.

உரை—மனிதக்கூட்டங்களை சுருக்கத்தில் இருவகை யாய் பிரிக்கக்கூடும், புபுக்ஷு என்னும், முமுக்ஷு என்னும், இவ்வுலகில் புத்திர, மித்திர, களத்திராதிகளைக் கொண்டு சிற்றின்பத்தை அநுபவிக்க விரும்புவோர் புபுக்ஷுக்கள் ஆவார். ப்ரம்மானந்தம் என்ற பேரின் பத்தைப்பெற விரும்புவோர் முமுக்ஷுக்கள் ஆவர். இவ் விருவரும் தங்கள் தங்கள் விருப்பத்தை நிறைவேற்ற பிரபத்திசெய்யலாம். புபுக்ஷு செய்யும் பிரபத்திக்கும், முமுக்ஷு செய்யும் பிரபத்திக்கும் வித்தியாஸமுண்டு. கீழ் பதிமூன்று ச்லோகங்களால் இவ்விரு பிரபத்திகளுக் கும் பொதுவான விஷயங்கள் கூறப்பட்டன, இந்த ச்லோகத்தால் மோக்ஷார்த்தமாகச் செய்யப்படுகிற பிரபத்தியில் விசேஷங்களைச் சொல்லுகிறார். அதிலும் பரமாத்மாவை யொழிந்த மற்றவையெல்லாம் பரமாத்மா வுக்கு சேஷபூதம் என்று அநுஸந்திப்பது முக்கியம் என்றும் இவ்வநுஸந்தாநம் மோக்ஷமார்கத்தைச் சேர்ந்த எல்லாநிவ்ருத்தி தர்மங்களுக்கும் பொதுவானது என்றும்,

அதில் பரந்யாசம் என்பது எவ்வளவு மட்டில் நிற்கிறது என்றும் சுட்டிக் காட்டுகிருர்.

மோக்ஷமார்க்கத்தில் இழிபவர் அனைவரும் தன்னையும் தன்னைச் சேர்ந்த வஸ்துக்கள் எல்லாவற்றையும் தன்னோடு பற்று அறுத்து, பரமாத்மாவுக்கே சேஷபூதங்கள் அதாவது - பரமாத்மாவுக்கே சொந்தமென்றும், பரமாத்மாவினுடைய உபயோகத்துக்காகவே ஏற்பட்டவை என்றும் கருதவேணும். இக்கருத்து, மோக்ஷோபாயம் அநுஷ்டிப்பதற்கு முன் தத்வஞானமாய் நிற்கும், அதன் பின், மோக்ஷோபாயத்தை விதிக்கின்ற விதிவாக்கியங்களில் இவ்வநுஸந்தானத்தையும் சேர்த்து கூறியிருப்பதால் மோக்ஷோபாயத்தில் ஒரு பாகமாய் நிற்கும். அதன்பின் இம்முமுக்ஷுவாலே பிரார்த்திக்கப்பட்ட புருஷார்த்தத்தில் சேர்ந்திருப்பதால் பகவத்கைங்கர்யம் என்ற புருஷார்த்தத்திலும் சேர்ந்திருக்கும். இவற்றில் அங்கி ப்ரபத்தியின் சொரூபம் எங்கே காணப்படுகிறது என்ருல் - மற்ரொருவனுலும் மற்ரொரு உபாயத்தாலும் சாதிக்க முடியாத தன்னுடைய அபீஷ்டம் எந்த அம்சத்தில் வரையிடப்பட்டு நிற்கின்றதோ அந்த அம்சத்தோடு நிற்கும். இங்கு ஆத்மீயம் என்பது மோக்ஷோபாயத்தையும், அதன் பயனையும் குறிக்கும். இவற்றில் எந்தெந்த அம்சங்கள் உண்டோ அவ்வளவும், தத்துவஞ்ஞான ரூபமாகவும், உபாயத்துக்குள் சொருகிநிற்கிற பாகங்களாகவும், முடிவில் மோக்ஷமென்னும் புருஷார்த்தத்தில் துணையாக இருந்து ஆதிமுதல் தொடர்ந்து நிற்கும். இக்கூட்டத்தில் சரணுகதி என்பது, தான் விரும்பும் பயனுக்கு பகவானைக் தவிர்த்து வேறு உபாயமில்லை என்ற பிரார்த்தனையோடு வரையிடப்பட்டிருக்கிறது. என்பது தாத்பர்யம்.

## पञ्चदशः श्लोकः

## பதினைந்தாம் ச்லோகம்

न्यासादेशेषु धर्मत्यजनवचनतोऽकिञ्चनाधिक्रियोक्ता, कार्पण्यं वांगमुक्तं भजनवदितरापेक्षणं वाप्यपोढम् ॥ दुस्साधेच्छोद्यमौ वा क्वचिदुपशमितौ अन्यसंमेळनेवा ब्रह्मास्त्रन्याय उक्तः तदिह न विहतो धर्म आज्ञादिसिद्धः ॥

व्या—सर्वशक्तौ भरं न्यस्यतः सर्वधर्मत्यागवचनात् वर्णाश्रमादि धर्मरूपमाज्ञाकैंकर्यम्, तदनुविद्धमनुज्ञाकैंकर्यं च न स्यातामित्यत्राह—न्यासादेशेष्विति—क्वचित्—चापलादशक्यप्रवृत्ते कस्मिंश्चिदधिकारिणि, अन्यसंमेळने—प्रपत्यङ्गव्यतिरिक्तानां तदर्थतया स्वीकृतौ, तत्—तस्मात् धर्माणां स्वरूपत्यागस्य प्रपत्यङ्गत्वाभावात्, तेषां प्रपत्यर्थत्वेन अनुपादानाच्चेत्यर्थः (अप्रतिपादनाच्चेति पाठान्तरम्) सर्वधर्मत्यागवचनस्यात्र सर्वाविरुद्धेष्वर्थान्तरेषु संभवत्सु तद्विपरीतार्थकल्पनं न युक्तमितिभावः एतेनालेपकादिपक्षाश्च प्रतिक्षिप्ताः

பதவுரை—ந்யாஸாதேசேஷு - சரணாகதியை விதிக்கு மிடங்களில், தர்மத்யஜநவசநத: - ஸர்வதர்மங்களையும் விடச்சொல்லி யிருப்பதால், அகிஞ்சநாதிக்ரியா - வேறுவழியில்லாதவன் இதுக்கு அதிகாரி என்பது, உக்தா - சொல்லப்பட்டது, வா - அல்லது, கார்பண்யம் - கார்பண்யம் என்ற, அதாவது வேறு போக்கற்று நிற்கும்

நிலையை நினைப்பது, கர்வமில்லாமை, முதலான, பகவா னுக்கு தன்னிடத்தில் தயை உண்டாகும்படி செய்கிற கார்யம், அங்கமாக, உக்தம் - சொல்லப்பட்டது, வா - அல்லது, பஜநவத் - பக்தியோகத்தைப்போல், இதரா பேக்ஷணம், - வர்ணாச்ரமதர்மாதிகளை. அங்கமாக அபேக்ஷி த்திருத்தல், அபோடம் - விலக்கப்பட்டது, வா - அல்லது, க்வசித் - பேராசை கொண்டு, அசக்யமான விஷயத்தில் முயலுகின்றவனிடத்தில், துஸ்ஸாதேச்சோத்யமௌ, அசக்யமானதில் ஆசையும் முயற்சியும், உபசமிதௌ - தடுக் கப்பட்டன. வா - அல்லது, அந்யஸம் மேளநே - ப்ரபத் திக்கு அங்கமல்லாதவற்றை ப்ரபத்திக்காக கைகொண் டால். பரஹ்மாஸ்திரந்யாய: - நம்பிக்கை குறைந்து மற்றதைக் கூட்டினால் தான் விலகிவிடுவது என்பது, உக்த: - உரைக்கப்பட்டது, தத் - ஆதலால், தர்மங்களை விடுவது பிரபத்திக்கு அங்கமல்லவாத லாலும், தர்மங்களை பிரபத்திக்கு அங்கமாகக்கூறுமை யாலும் ஆஜ்ஞாதி ஸித்த: - ஆஜ்ஞையாலும் அநுஜ்ஞையாலும் ஏற்பட்ட, தர்ம: - தர்மம், இஹ - இந்த ப்ரபத்தியில் நவிஹத: - விலக்கப்பட்டவில்லை.

உரை—சரணாகதியை விதிக்குமிடங்களில் ஸர்வதர் மங்களையும் விடச் சொல்லியிருப்பதால் பிரபந்நனுக்கு, ஆஜ்ஞாகைங்கர்யமென்னும் அநுஜ்ஞாகைங்கர்ய மென்னும் இருவகைப்பட்ட வர்ணாச்ரமதர்மங்கள் செய்யத் தேவை யில்லை, என்ற ஆக்ஷேபம் தோன்ற அதற்கு ஸமாதாநம் அருளிச்செய்கிறார் - ஆக்ஞா கைங்கர்யமாவது - ஸந்த்யோ பாஸநம் முதலான நித்யநைமித்திக கர்மங்கள், அநுஜ்ஞா கைங்கர்யமாவது - செய்தால் பகவத்ப்ரீதி உண்டு, செய்யா விட்டால் ப்ரத்யவாயமில்லை என்று இருக்கும் அநிஷித்த

காம்யங்கள், இவை யெல்லாம் சரணுகதனுக்கு அவச்யமே. ஆனல் ஸர்வதர்மான் பரித்யஜ்ய என்று ஸர்வதர் மங்களேயும் விடச் சொல்லியிருக்கிறதே என்றல் - அந்த வசநத்துக்கு ஐந்து விதமாய் அபிப்ராயம் கூறுகிறர்.

1. அகிஞ்சநனயிருப்பவனுக்கே சரணுகதியில் அதிகாரம், அகிஞ்சநனவது - வேறு உபாயம் அநுஷ்டிக்க திறமையற்றிருக்கை.

2. பரித்யஜ்ய - என்றதால் சரணுகதிக்கு அங்கமான கார்பண்யம் சொல்லப்பட்டதாகவுமாம். கார்பண்யமாவது - முன்பு சொன்ன ஆகிஞ்சந்யாதிகளுடைய அநுஸந்தான மாதல், அதடியாக வந்த கர்வ ஹாநியாதல், க்ருபாஜநக க்ருபணவ்ருத்தியாதல் என்று ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸார வாக்யம் இங்கு அநுஸந்திக்கத்தக்கது.

3. பக்தியோகத்துக்கு வர்ணுச்ரமாதிதர்மங்களே அங்கமாக விதித்திருக்கிறது. இதுக்கு அவை அங்கமன்று. ஆயினும், பகவானுடைய கட்டளேயை கீழ்ப்படிந்து நடத்தல் என்ற ரீதியில் கைங்கர்யபுத்தியால் செய்யத் தக்கவை என்ற விசேஷம் ஸர்வதர்மான் பரித்யஜ்ய என்பதால் காட்டப்பட்டது.

4. தனக்கு சக்யமல்லாத விஷயத்தில் ஆசைப்படுபவனேக்குறித்து அது செய்யாதே. சுளுவான வழிகாட்டுகிறேனென்கை.

5. ஸர்வதர்மாந் என்று பல அங்கங்களோடு கூடின பக்தியோகத்தை நினேத்து அது உனக்கு வேண்டாம், அதுவும் கூடினல் ப்ரஹ்மாஸ்திரம் போல் பிரபத்தி விலகிவிடும் என்று கூறினதாகவுமாம்.

ஆதலால் ஸர்வதர்மங்களும் ப்ரபத்திக்கு அங்கமல்ல பிரபத்திக்காக மற்றதர்மங்களே அநுஷ்டிக்கத் தேவை

யில்லை. இப்படி ஒன்றுக்கும் விரோதமில்லாதபடி அந்த வசநத்துக்கு பொருள் கூறும்படியிருக்க, விபரீதமாய் பொருள் கொள்ளுதல் யுக்தமன்று. இத்தால் கண்டதை சாப்பிட்டு இஷ்டப்படி செய்து திரிகின்ற அலேபகமதமும் கண்டிக்கப்பட்டதாகிறது. இங்கு ஸ்ரீமத்ரஹஸ்யத்ரய ஸாரத்தில் சரமச்லோகாதிகாரத்தில் இப்பொருளை விளக்கிக் காட்டியிருப்பது வெகு அழகு. அதை எழுதுகிறோம்.

**अतोशक्ताधिकारत्वमाकिञ्चन्यपुरस्क्रिया**
**अनङ्ग भावो धर्माणाम् अशक्यारम्भवारणम्**

**तत्प्रत्याशाप्रशमनम् ब्रह्मास्त्रन्यायसूचनम्**
**सर्वधर्मपरित्यागशब्दार्थाः साधुसंमताः**

மூண்டாலுமரியதனில் முயல வேண்டா
முன்னமதி லாசைதனை விடுகை திண்மை
வேண்டாது சரண நெறிவேறோர் கூட்டு
வேண்டிலயனத்திரம் போல் வெள்கி நிற்கும்

நீண்டாகு நிறை மதியோர் நெறியில்கூடா
நின்றனிமை துணையாக வென்றன் பாதம்
பூண்டாலுன் பிழைகளெல்லாம் பொறுப்பேனென்ற
புண்ணியனார் புகழனைத்தும் புகழுவோமே என்று.

## षोडशः श्लोकः

## பதினாறுவது ச்லோகம்

आदेष्टुं स्वप्रपत्तिं तदनुगुणगुणाद्यन्वितं स्वं मुकुन्दः मामित्युक्त्वैकशब्दंवदति तदुचितंतत्र तात्पर्य मूह्यम्। तत्प्राप्यप्रापकैक्यं सकलफलदतां न्यासतोन्यान पेक्षाम् प्राधान्याद्यंच किंचित् प्रथयति सपरं श्रीसखे मुक्त्युपाये ।

व्याख्या—ननु यदि प्रपत्तिरुपायः स्यात् तदा हि, तस्या अङ्गित्वं केषांचिदङ्गत्वं च वक्तव्यम्-सातु तत्तद्वाक्येषु उपायतयोक्तस्य शरण्यस्य विशेषणतया प्रयुक्तैः एकादिशब्दैः उपायबुध्यनर्हत्वेन व्यवच्छिद्यते तस्मात् पूर्वोक्तं सर्वमयुक्तम् इत्यत्राह—आदेष्टुमिति-तत् - विध्यनुरोधेन नेतव्यत्वादितिभावः। अन्यथाप्युपपन्नं सिद्धोपायस्यैक्यं प्रपत्तेस्तत्प्रसादोपायत्वं न विरुन्ध्यादिति भावः। एवं निर्विशेषाद्वैतबुद्धिविधानादिपक्षाश्चात्र निरस्ताः वेदित व्याः.

பதவுரை —முகுந்த: - ஸ்ரீ கிருஷ்ணன், ஸ்வப்ரபத்திம் - தன்னிடத்தில் சரணமடைவதை, ஆதேஷ்டும் - விதிப்பதற்காக, ததநுகுண - அதற்கு ஏற்ற, குணாதி - நற்குணங்கள் முதலியவற்ருேடு, அந்விதம் - கூடியிருக்கிற, ஸ்வம் - தன்னை, மாம்இதி - மாம்=என்னை என்று, உக்த்வா - சொல்லி, ஏகசப்தம் - ஒருவனை என்ற சொல்லை, வததி - பேசுகிருன். தத் - ஆதலால், விதிக்குத் தக்கபடி பொருள்கொள்ள வேண்டியிருப்பதால், தத்ர - அந்த ஏக சப்தத்தில், தாத்பர்யம் - கருத்து, ஊஹ்யம் - ஊகிக்கத்

தக்கது, ஸ: - அந்த ஏகசப்தமானது, முக்த்யுபாயே - முக்திக்கு உபாயமாயிருக்கிற, ஸ்ரீ ஸகே பரம் எம்பெருமானிடத்தில் மாத்திரம், தத் - அப்படிப்பட்ட, வேதாந்த சாஸ்திரங்களில் அங்காங்கு பிரசித்தமான என்றபடி, ப்ராப்யப்ராபகைக்யம் - அடையப்படுமவன், அடைவிப்பவன், இவ்விரண்டும் ஒருவனே என்பதையும், ஸகல பலததாம் - ஸர்வபலன்களையும் அளிக்குந் தன்மையும், ந்யாஸத: அந்யாநபேக்ஷாம் - சரணாகதியைத் தவிர்த்து மற்றொன்றை எதிர்பாராமையையும், ப்ராதாந்யாத்யம்ச - முக்கியமாயிருப்பது முதலான, கிஞ்சித் - சிலவற்றையும், ப்ரதயதி - வெளிப்படுத்துகின்றது.

உரை—சரணம் என்னும் சொல்லுக்கு, உபாயம், வீடு, இரக்ஷிப்பவன் என்று மூன்று பொருட்கள் உண்டு. "மாமேகம் சரணம் வ்ரஜ" என்ற விடத்தில் உபாயம் என்ற பொருளையே கொள்ள வேணும் என்று தீர்மானிக்கப் பட்டிருக்கிறது. ஸ்ரீ பகவான், தன்னை ஒருவனையே உபாயமாகக்கொள் என்று விதித்தார் என்றால் தன்னைத் தவிர்த்து வேறு உபாயம் இல்லை என்று நிச்சயமாயிற் றல்லவா. அப்போது பிரபத்தி உபாயமல்ல என்று ஏற்படுகிறது. பிரபத்தி உபாயமானால், இது அங்கி, மற்றவை அங்கங்கள் என்று சொல்லுவது பொருந்தும். ஏக சப்தத்தைக் கொண்டு பகவானைத் தவிர்த்து வேறு உபாயமில்லை யென்று அறுதியிட்டபின் முன் சொன்னவை எல்லாம் பொருந்ாதவை என்று பூர்வபக்ஷம் தோன்ற, அதற்கு ஸமாதாநம் அருளிச் செய்கிறார் ஸ்ரீ கிருஷ்ணன். ஸர்வதர்மாந்பரித்யஜ்ய, என்று சரணாகதியை விதிக்கிறார். விதிக்கும்போது, தன்னை "மாம்" என்றும், "ஏகம்" என்றும் குறிப்பிட்டுப் பேசுகிறார். மாம் என்பதால்

பிரபத்தியை ஏற்றுக்கொள்வதற்குரிய குணங்கள் தன்னிடத்தில் உண்டு என்பதை காட்டுகின்ருர். ஏகசப்தத்துக்கு முன்பின் விரோதமின்றி பொருள்கொள்ள வேணும். அதாவது - உபாயம் இரண்டு விதம். ஸாத்யோபாயம் என்றும், ஸித்தோபாயம் என்றும், ஸாத்யோபாயம் - பிரபத்தி, ஸித்தோபாயம், - பகவான், உபாயத்துக்கு எதிரிடைச்சொல் உபேயம் என்பது, அதாவது உபாயத்தால் பெறக்கூடிய பயன். அவ்வுபேயம் என்ற சொல் பகவானையே குறிக்கும். ஆகவே பகவானுக்கு இரண்டு ஆகாரமுண்டு, உபாயத்வமும் உபேயத்வமும். ஸாத்யோபாய ஸித்தோபாயங்களில் ஸித்தோபாயமே முக்கியமும் ஸ்வதந்த்ரமுமானது. இங்கு ஏகசப்தத்தால் உபாயமும் நானே உபேயமும் நானே என்று காட்டுகிருர். தவிரவும் - ஏகம் - எல்லாபயன்களையும் தரக்கூடியவன் நான் ஒருவன் - என்று - அன்றிக்கே - ஏகம் - மற்றவை ஒன்றையும் அபேக்ஷிக்காதவன். பின்னேயும் - ஏகம் - மோக்ஷந்தர நான் ஒருவனே முக்கியமானவன். இவை முதலான பொருட்களை கருத்துக்கொண்டு மாமேகம் என்ருர், இத்தால் பிரபத்தி உபாயமன்று என்று கூறப்பட்டதாகாது, பகவானுக்கு நம்மிடத்தில் அநுக்ரஹபுத்தி உண்டாக்க ப்ரபத்தி தேவை, என்று தாத்பர்யம். சிலர் இந்த ஏகசப்தத்துக்கு அத்வைதமதரீதியில் நிர்விசேஷ ப்ரஹ்மம் என்ற பொருள் கூறினர் அதுவும் பொருந்தாது என்று அறியத்தக்கது.

## सप्तदशः श्लोकः

## பதினேழாவது ச்லோகம்

स्वाभीष्टप्राप्तिहेतुः स्वयमिह पुरुषैः स्वीकृतः स्यादुपायः शास्त्रे लोकेच सिद्धः सपुनरुभयथा सिद्ध साध्यप्रभेदात् ॥ सिद्धोपायस्तु मुक्तौ निरवधिकदयः श्रीसखः सर्वशक्तिः साध्योपायस्तु भक्तिर्न्यसनमिति पृथक् तद्वशीकारसिध्यै ।

व्या—उक्तार्थस्थिरीकरणाय सामान्यतः उपायशब्दार्थम् (विवृण्वन्) सिद्धसाध्योपायविशेषौ तत्प्रयोजनंच विभजते स्वाभीष्टेति ।

பதவுரை—இஹ - இப்பிரபஞ்சத்தில், சாஸ்த்ரே - சாஸ்த்ரத்திலும், லோகேச - உலக நடப்பிலும், ஸித்த: - பழக்கத்தில் இருந்து வருகிறதும், புருஷை: - ஜனங்களாலே, ஸ்வயம் - தானாகவே, அதாவது - இதரருடைய ப்ரேரணையின்றிக்கே, ஸ்வீக்ருத: - அங்கீகரிக்கப்பட்டதுமான, ஸ்வாபீஷ்ட - தனது விருப்பத்தை, ப்ராப்தி - பெறுவதற்கு ஹேது: - காரணம் எதுவோ அதுவே, உபாய: - உபாயம் என்று பெயர் பெற்றதாக, ஸ்யாத் - இருக்கவேண்டும், ஸபுந: - அவ்வுபாயம் பின்னேயும், ஸித்த ஸாத்யப்ரபேதாத் - சித்தம் என்னும் ஸாத்யம் என்னும் பிரிவால் உபயதா - இரண்டுவிதம், முக்தௌ - மோக்ஷவிஷயத்தில் ஸித்தோபாய: - ஸித்தோபாயமான

வன், நிரவதிகதய: - அளவில்லாக்கருணை கொண்ட, ஸர்வ சக்தி: - ஸர்வவல்லமையுள்ள, ஸ்ரீஸக: - ஸ்ரீமந்நாராயணனே, ஸாத்யோபாயஸ்து - ஸாத்யோபாய மோவெனில், தத்வசீகாரஸித்யை - அவ்வெம்பெருமானை வசமாக்குவதன் பொருட்டு ஏற்பட்டவையான, பக்தி: - பக்தி என்பதும், ந்யஸநம் - சரணாகதி என்பதும், ப்ருதக் - தனிப்பட்டவை. வெவ்வேறு—

உரை—இதுவரை, கீழ்ச் சொன்ன பொருளை உறுதிப் படுத்துவதின் பொருட்டு, உபாயம் என்ற சொல்லுக்கு பொதுவான பொருளையும், ஸித்தம், ஸாத்யம் என்ற பிரிவுகளையும், அவ்வுபாயத்தால் பெறக்கூடிய பயன் இன்னதென்பதையும் பிரித்துக்காட்டுகின்றார் - இந்த லோகத்தில் - ஜநங்கள் தனது இஷ்டத்தை அடைய எதைக் கைக்கொள்ளுகிறார்களோ, அது உபாயம் எனப் படும். இவ்விஷயம் உலக நடத்தையிலும் சாஸ்திர ரீதியிலும் பழக்கத்தில் இருப்பதே. மோக்ஷம் பெற கைக்கொள்ளவேண்டிய உபாயம் ஸித்தம் என்னும் ஸாத்யம் என்னும் இருவகைப்படும். அவற்றில் ஸித்தோபாயம் எம்பெருமானே. ஸாத்யோபாயத்தில் இருவகை உண்டு. பக்தி என்னும் பிரபத்தி என்னும், இவ்விரண்டும் பகவானை வசமாக்க உபயோகப்படுகின்றன என்று.

## अष्टादशः श्लोकः

## பதினெட்டாவது ச்லோகம்

अत्यन्ताकिञ्चनोहं त्वदपचरणतः संनिवृत्तोद्य
नाथ, त्वत्सेवैकान्तधीः स्यां त्वमसि शरणमित्यध्यव

स्यामि गाढम् ॥ त्वं मे गोपायिता स्याः त्वयि निहितभरोस्म्येवमित्यर्पितात्मा यस्मै स न्यस्तभारः सकृदथतु सदा न प्रयस्येत्तदर्थम् ।

व्या—समर्थितमेव साङ्गभरन्यासम्, यथावदनुष्ठानाय मुख भेदेन शिक्षयन्, तद्विषयं कर्तव्यशेषं नास्तीत्याह—अत्यन्तेति— यस्मै—प्रयोजनायेति शेषः। सकृदित्यनेन उपासनवत् अस्यावृत्ति सापेक्षत्वं नास्तीत्युच्यते। सकृत्कृतः शास्त्रार्थ इत्यस्यात्रापवादो नास्ति प्रत्युत सकृदेवेत्यादिभिरनुग्रहएव। सदा - यावत्फलप्राप्ति इत्यर्थः ननु न्यासनिष्ठमेव तस्यैवं विदुषः इति परामृश्य तत्कर्तव्यत्वेन पुरुष विद्या आम्नाता, साच "यन्मरणं तदवभृथ" इन्यन्ता यज्ञदृष्टिरूपा च अतो यावज्जीवं तदर्थं कर्तव्यस्य विधीयमानत्वात्, नप्रयस्येत्तदर्थमि त्यनुपपन्नम् - मैवम् - तत्रापिहि न्यस्तभरस्य कर्तव्यान्तर नैरपेक्ष्यमेव विवक्षितम्। यदि तु प्रस्तुत विद्याङ्गतयात्र यज्ञक्लृप्तिर्विधीयते, तर्हि दर्शपूर्णमासादीनां क्लृप्तिर्नवाच्या, तेषां यज्ञोपयोगित्वाभावात् अश्रुता पूर्व तदन्वित यज्ञान्तर कल्पनम्, अनेकशास्त्रार्थ दृष्टिविधि कल्पनं च अत्यन्तगौरवोपहतम्। एकस्यावभृथात् पूर्वम् अन्येषां क्लृप्तिश्चानुप पन्ना-तस्मात्—"एवं शरणमभ्येत्य भगवन्तं सुदर्शनम् अनुष्ठित क्रतुशतो भवत्येव नसंशयः" इतिवत् यज्ञादिकं सर्वमस्य स्वतः संपन्नं भवती ति स्तुतिमात्रे तात्पर्यं ग्राह्यम्। शारीरकभाष्यमपि एतद- विरोधेन भाव्यम्।

பதவுரை—நாத - ஓ நாதனே, அத்ய - இப்போது, அஹம் - நான், அத்யந்தா கிஞ்சந: - மிகவும் புகல் ஒன்று மில்லாதவன், த்வதபசரணத: - உனக்கு விரோதம் செய்வதிலிருந்து, ஸங்நிவ்ருத்த: - ஒழிந்தவன், த்வத்ஸேவை காந்ததீ: - உனக்கு ப்ரியம் செய்வதிலேயே நோக்குள்ளவனாக, ஸ்யாம் - இருக்கக் கடவேன், த்வம் - நீயே, சரணம் - உபாயமாக, அஸி - இருக்கிறாய், இதி - என்று, காடம் - தீர்மானமாக, அத்யவஸ்யாமி - அறுதியிடுகிறேன், த்வம் - நீயே, கோபாயிதா - இரக்ஷிப்பவனாக, ஸ்யா: - இருக்கவேணும், த்வயி - உன்னிடத்தில், நிஹிதபர:, - சுமையை ஒப்படைத்தவனாக, அஸ்மி - இருக்கிறேன், ஏவம் இதி - இவ்விதமாகவே, அர்ப்பிதாத்மா - தன்னை ஒப்புக்கொடுத்தவனான, ஸ: - அந்த சரணாகதன், யஸ்மை - எந்த ப்ரயோஜநத்தின் பொருட்டு, ந்யஸ்தபார: - தனது பாரத்தை ஒப்புவித்தானோ, ததர்த்தம் - அதற்காக, அத - அதற்குப்பின், ஸதா - எக்காலத்திலும், பயன் பெறுமளவும், என்றபடி. நப்ரயஸ்யேத் - ப்ரயாஸப்படக்கூடியவனல்லன். என்று.

உரை—கீழில் தீர்மானிக்கப்பட்டதான அங்கங்களோடு கூடின பரந்யாஸத்தை உள்ளபடி அநுஷ்டிப்பதின் பொருட்டு, பின்னுமொருமாதிரி போதித்து, அதற்காகச் செய்ய வேண்டிய கார்ய சேஷம் ஒன்றுமில்லை என்கிறார் - ஸக்ருத் - ஒரே தடவை பரந்யாஸம் செய்தவன் என்றவத்தால், பக்தியோகத்தைப்போல் இதுக்கு ஆவ்ருத்தி அதாவது திரும்பவும் அடிக்கடி அநுஷ்டித்தல் இல்லை என்றதாயிற்று. சாஸ்திரத்தில் விதிக்கப்பட்ட கார்யம் ஒரு தடவை செய்யப்பட்டால் அவ்விதி ஓய்ந்தது, நாம் விதியை பூர்த்தி செய்தவர்களாகிறோம் - அவ்விதிக்கு, மறுபடியும்

செய்யவேணும் என்ற விலக்கு விதியில்லாதவரையில் புநரநுஷ்டாநம் இல்லை. "ஸக்ருதேவ ப்ரபந்நாய" இது முதலிய விடங்களில் ஒரே தடவை என்று கூறியது, இதற்கு அநுகூலமே. பயன் பெறுமளவும் இவன் விசாரமற்றிருக்கக் கடவன் - தைத்திரீயோபநிஷத்தில் முடிவில் "தஸ்யைவம் விதுஷ:" என்று தொடங்கி புருஷ வித்யை கூறி யிருக்கிறது, அதில் ப்ரபந்நனை ஒரு யாக ரூபியாகக் காட்டி யாகத்துக்குரிய அங்கங்கள் எல்லாம் இவனது சரீரம் ஜீவன், வாக்கு, மார்பு, முதலிய அங்கங்களாக நிரூபித்து, இவனது ஆயுஷ்காலத்தை தீக்ஷையாகவும், இவனது மரணம் அவப்ருதம், அதாவது யாக பூர்த்தியாகவும் கூறியிருக்கிறது. அதில் மரணம் வரை இந்த யாகம் செய்யும் முறையை கூறி யிருப்பதால் பக்தியோகத்தில் போல் இதிலும் யாவஜ்ஜீவம் அனுஷ்டிக்க வேணும் என்ற நிர்பந்தம் உண்டு என்று தோன்றுகிறது; என்ற ஆக்ஷேபம் தோன்ற, அப்புருஷவித்யை ப்ரபந்நனுடைய நிலையை யாகம் செய்வது போல் மஹா பரிசுத்தமானது என்று துதிக்க வந்ததே யல்லாமல், அதுக்கு ஆவ்ருத்தியை விதிப்பதில் கருத்தில்லை. யாகத்துக்கு அங்கமல்லாத தர்சபூர்ணமாஸங்களையும், இன்னும் யாகத்துக்கு சேராத அபூர்வமான விஷயங்களை இங்கு அங்கமாகக் கூறி யிருப்பதும் துதிக்க வந்தது என்ற கருத்துக்கிணங்கினவை. அதாவது - பிரபத்தி செய்தவன், ஸகல யாகங்களையும் ஒழுங்காகச் செய்தவன் என்ற மேன்மையைப் பெறுகிறான் என்று. ஸ்ரீ பாஷ்யகாரர் ஸ்ரீ பாஷ்யத்தில் இப்புருஷ வித்யையை ப்ரஹ்மோபாஸநத்தைச் சேர்ந்ததாகக் கூறி, உபாஸநத்துக்கு ப்ரஹ்ம ப்ராப்தியே பயன் என்றும், இதுபோலவே மற்றொரு புருஷ வித்யை சாந்தோக்யத்தில்

கூறியது, ஆயுள் விருத்தியைக் கருதியது என்றும் அபிப்ராயங்கொண்டு நிர்வஹித்திருக்கிறார். ஸ்ரீ தேசிகனே - இப் புருஷ வித்யையை சரணாகதியைத் துதிக்க வந்ததே என்று தீர்மானித்து, ஸ்ரீ பாஷ்யத்தையும் இக் கொள்கைக்கு ஒற்றுமையாக நிர்வஹித்துக் கொள்ளவும் என்று அருளிச் செய்திருக்கிறார். ப்ரம்ம வித்தியாங்கம் என்ற ஸ்ரீ பாஷ்ய வாக்கியத்துக்கு - பிரம்மவித்தியா - என்ற சொல் பிரபத்திக்கும் பொதுவானது என்று கூறி. அங்கம் என்பதற்கு ஸ்துதிவாக்கியம் என்று பொருள்கொண்டு ஸ்ரீ தேசிகன் நிர்வஹித்திருக்கிறார். இந்த ச்லோகத்தில் ஆநுகூல்ய ஸங்கல்பம் முதலிய ஐந்து அங்கங்களையும் கொஞ்சம் வேறு சொல்லால் கூறி, ஆத்மநிக்ஷேபத்தை அங்கியாகக் கூறி, இனி இவன் நிர்பரன் நிர்பயன் என்று முடித்திருப்பதை நன்கு கவனிக்கவும்.

## एकोनविंशः श्लोकः

## பத்தொன்பதாவது ச்லோகம்

त्यक्त्वोपायानपायानपि परमजहन्मध्यमां स्वार्हवृत्तिम्, प्रायश्चित्तंचयोग्यं विगतऋण ततिः द्वन्द्ववात्यां तितिक्षुः ॥ भक्तिज्ञानादिवृद्धिं परिचरणगुणान् सत्समृद्धिंच युक्तां नित्यं याचेदनन्य स्तदपि भगवतः तस्य यद्वाप्तवर्गात्

व्या—कृतकृत्यस्योत्तरदशायां स्वाधिकाराद्यनुगुणं त्याज्यं स्वतन्त्रविधिप्राप्तं कर्तव्यम् , अनुसन्धेयं, प्रार्थनीयंच संगृह्णाति—त्यक्त्वेति—

उपायान्—काम्यधर्मान्, अपायान्—प्रत्यवायहेतून्, परं—केवलं, प्रपत्युत्तरकालंवा, मध्यमाम्—उपायापायवर्गानन्विताम्, स्वार्हवृत्तिम नित्यरूपां, तत्समान नैमित्तिकरूपांच, वृत्तिम्, "अपायसंप्लवे सद्यः प्रायश्चित्तं समाचरेत्। प्रायश्चित्तिरियं सात्र यत्पुनः शरणं व्रजेत्" इत्युक्तमाह—प्रायश्चित्तं च योग्यमिति— अजहदित्यनुषज्यते, "देवर्षिभूतात्मनृणां पितृणां न किङ्करोनायमृणीच राजन्"॥ इत्याद्युक्तं सूचयति—विगतऋणततिरिति, ब्रह्मचर्यादिभिरपाकर्तव्यं भगवत्प्रपन्नस्य प्रपत्यैवापाकृतं, देवयज्ञादिकं त्वस्य मध्यमवृत्यनुप्रविष्टं कैङ्कर्यमिति भावः। द्वन्द्वतितिक्षावचनं प्रारब्धकर्मक्षयदर्शन जनितप्रीति सूचकं, अव्याकुलकैंकर्योपादानार्थंच। परिचरणगुणान्—कैङ्कर्योपकरणभूतान्, गन्धपुष्पादीन्, यद्वा फलसङ्गत्यागादीन्, सत्समृद्धिरपि कैङ्कर्यानुपयुक्ता नयाच्येत्यभिप्रायेण युक्तामित्युक्तम्। भगवत इत्यादिना देवतान्तरेभ्यस्तदीयेभ्यश्च भक्त्यादिकमपि नयाच्यमिति सूच्यते।

பதவுரை—உபாயாந் - மோக்ஷோபாயத்தையும், நித்ய நைமித்திகங்களையும் ஒழிந்த காம்யதர்மங்களையும், அபாயாந் அபி - பகவந்நிக்ரஹஹேதுக்களான அபராதங்களையும், த்யக்த்வா - விட்டு, பரம் - ப்ரபத்திக்குப்பின், மத்யமாம் - முன்சொன்ன உபாயாபாயங்களில் சேராத நடுத்தரமான, ஸ்வார்ஹவ்ருத்திம் - நித்யகர்ம ரூபமாகவும், அதைப்போல் விடமுடியாதவையான நைமித்திக கர்மரூபமாகவும் இருக்கிற, தனது நிலைமைக்கு ஏற்ற செயலையும் யோக்யம் - பிரபந்நனுக்கு உரியதான, ப்ராயச்சித்தம்ச - புந: ப்ரபத்திரூபமான பிராயச்சித்தத்தையும், அஜஹத் - விடாதவனாய், விகதருணததி: - தேவக்கடன், ரிஷிக்கடன், பித்ருக்கடன், இவ்வித கடன்களில் துவக்கற்றவனாய்,

த்வந்த்வவாத்யாம் - சீதோஷ்ணம், சுகதுக்கம் முதலான த்வந்த்வங்களென்னும் சுழற்காற்றை, அத்தாலுண்டாகும் பீடையை என்றபடி. திதிக்ஷு: - பொறுத்தவனாய், அநந்ய: எம்பெருமானை விட்டு மற்றதில் துவக்கற்றவனாய் பரிசரணகுணாந் - பகவத் கைங்கர்யத்துக்குத் தேவையான கருவிகளை, அதாவது - சந்தனம் புஷ்பம் முதலிய பதார்த்தங்களை, அல்லது, பலத்யாகம், ஸங்கத்யாகம் முதலியவற்றையும், பக்திஜ்ஞாநாதி வ்ருத்திம் - பகவத்பக்தி, அதற்கேற்ற அறிவு இவை முதலியவற்றின் வளர்தலையும், யுக்தாம் - தனது நிலைக்கு அநுகுணமான, ஸத்ஸம்ருத்திம்ச - சான்றோர்களின் சிறப்பையும், யாசேத் - அபேக்ஷிக்கக்கடவன். ததபி . அந்த யாசனையும், பகவத: - பகவானிடமிருந்தோ, யத்வா - அல்லது, தஸ்ய - அந்த பகவானுடைய, ஆப்தவர்க்காத் - பக்தர்களிடமிருந்தோ. (ஸ்யாத் இருக்கவேணும்).

உரை—பிரபத்தியைப்பற்றிச் சொல்லவேண்டுவது எல்லாம் சொல்லியாய் விட்டது. இனி பிரபந்நன் க்ருதக்ருத்யனானபின் தன்னுடைய நிலைமைக்கு ஒத்தபடி, விடவேண்டியவை எவை? விதிப்ராப்தமாய் அவச்யம் அநுஷ்டிக்கத்தக்கவை எவை? இவனுடைய அநுஸந்தானம் எப்படி இருக்கவேணும், இவன் எதை பிரார்த்திக்கவேணும் என்பதை சுருக்கமாய் அருளிச் செய்கிறார். நித்யம், நைமித்திகம், காம்யம் என்று மூன்று வகை கர்மங்கள் உண்டு. நித்யமாவது - ஒரு காரணத்தைப் பற்றியதல்லாமல், சாஸ்திர விதிகளால் வந்தவை. ஸந்தியோபாஸநம், பஞ்சமஹாயஜ்ஞங்கள், மாத்ரு பித்ராதி ச்ராத்தங்கள். இவை முதலானவை நித்தியங்களாம். நைமித்திகமாவது - காலதேசாதிகளில் அப்போதைக்

சுப்போது நேர்படும் யோகவிசேஷங்களால் வந்தவை. சந்திர சூர்ய க்ரஹணங்கள், சில மாஸ ஸங்க்ர மணங்களும் நைமித்திகங்களில் சேரும். இவையும் நித்தியங்களைப் போலவே அநுஷ்டித்தே தீரவேண்டியவை. காம்யங்களாவன - ஒரு பயனைக் கருதி செய்யவேண்டியதாய் வந்தவை. பஞ்ச கவ்யப்ராசநம், புண்யாஹவாசநம். ஜ்யோதிஷ்டோமாதி யாகங்கள், பகவத்ஸேவா, பாகவத ஸேவா, முதலியன காம்யங்களில் சேரும். பயன் பெற விருப்பமுண்டானல் செய்யலாம், இல்லையேல் செய்யத் தேவையில்லை. இக்காமியங்களில் நிஷித்த காம்யம், அநிஷித்தகாம்யம் என்று இருவகை உண்டு. நிஷித்த காம்யமாவது - நமது வர்ணாச்ரமங்களுக்கோ, மதக் கொள்கைக்கோ விருத்தமான காம்யங்கள் - விரோதமில்லாதவை அநிஷித்த காம்யங்கள். நித்ய நைமித்திகங்களுக்கு ஸமயம் கொடுத்து மீதி ஸமயத்தில் அநிஷித்த காம்யங்களைச் செய்ய வடுக்கும். இங்கு உபாயங்களையும் அபாயங்களையும் விட்டு என்ற விடத்தில் உபாய சப்தத்தால் நிஷித்த காம்யங்களையும், அபாய சப்தத்தால் துஷ்கர்மங்களையும் சொன்னபடி - இப்படி உபாயங்களையும் அபாயங்களையும் விட்டிருக்கை, மத்தியமவ்ருத்தி என்று பேசப் படுகிறது. இதை 12-வது ச்லோகத்தின் உரையிலும் காணலாம் - பிரபந்நனுக்கு அபராதங்கள் நேர்ந்தால், அதற்கு தர்ம சாஸ்திரங்களில் கூறிய பிராயச்சித்தங்கள் செய்யத்தக்கவையல்ல. பிரபந்நன் விஷயத்தில் புந: பிரபத்தியே பிராயச்சித்தம் என்று பிரபத்தி சாஸ்திரத்தில் கூறியிருப்பதால், இங்கு யோக்யமான பிராயச்சித்தத்தை விடாதவனாய் என்று கூறினார் - மனிதன் பிறக்கும்போதே மூன்று கடன்களோடேயே பிறக்கிறான். வேதாத்யநத்

தால் ரிஷிக்கடனையும், யாகாதிகளால் தேவக்கடனையும், ஸந்ததி விருத்தியால் பித்ருக்கடனையும் தீர்க்க வேண்டும். இம்மூன்று கடன்கள் தீர்ந்தபின்னே மோக்ஷமார்க்கத்தில் இறங்கவேணும் என்று சாஸ்திரவிதி - இந்த நிர்பந்தம் பிரபத்திக்கு இல்லை. பிரபந்நனுடைய முன்சொன்ன மூன்று கடன்களும் பிரபத்தியாலேயே விலக்கப்பட்டு இவன் கடனிலிருந்து விடப்பட்டவனாக ஆகிறான். பிரபத்தி செய்துகொண்டவன் மிகுந்த வாழ்நாளில் பிரகிருதிஸ்வபாவத்தால் நேர்படும் சுகதுக்காதிகளை பொறுத்து அவற்றை பாராட்டாதது மாத்திரமின்றிக்கே, இவற்றால் நமது கர்மம் தொலைகிறது என்று களிப்புடன் இருக்கவேணும். தவிரவும் - நாளுக்குநாள் பக்தியும் அறிவும் வளரவேணும். பகவத்கைங்கர்யத்துக்குத் தேவையான கருவிகள் தனக்கு லபிக்கவேணும், ஸாதுக்களின் நிலைசெழித்து ஒங்கவேணும் என்றும் பிரார்த்திக்கவேணும். இந்த பிரார்த்தனை பகவானிடத்திலோ, பகவானைச் சேர்ந்தவர்களிடமிருந்தோ ஆகவேணுமேயல்லாமல் இதர தேவதைகளிடமிருந்தோ, அவர்களைச் சேர்ந்தவர்களிடமிருந்தோ யாசிக்கக்கூடாது என்றபடி.

### विंशः श्लोकः

### இருபதாவது ச்லோகம்

आज्ञाकैङ्कर्यवृत्तिष्वनघगुरुजनप्रक्रियानेमिवृत्तिः
स्वार्हानुज्ञातसेवाविधिषु च शकने यावदिष्टं प्रवृत्तः ॥ कर्म

प्रारब्धकार्यं प्रपदनमहिमध्वस्तशेषं द्विरूपं भुक्त्वा स्वाभीष्टकाले विशति भगवतः पादमूलं प्रपन्नः

व्याख्या—उक्तप्रकारस्या धिकारिणः स्वाभिमतकाले परमफलप्राप्तिमाह-आज्ञेति—प्रपत्त्यङ्गत्वाभावेपि "विहितत्वाच्चाश्रमकर्मापीति" न्यायेन, स्वतन्त्राधिकारसिद्धेः शक्तस्यास्य कर्तव्यमाज्ञाकैङ्कर्यम्, अकरणे प्रत्यवायरहितम् अनुज्ञाकैङ्कर्यम्। द्विरूपमिति—पुण्यपापरूपमित्यर्थः.

பதவுரை—பிரபந்ந: - பிரபந்நன், ஆஜ்ஞாகைங்கர்ய வ்ருத்திஷு - ஆஜ்ஞாகைங்கர்யங்களை செய்வதில் அநக - குற்றமற்ற, குருஜந - பெரியோர்களின், ப்ரக்ரியா - அநுஷ்டாநத்தை, நேமிவ்ருத்தி: - வண்டிவட்டை போல் தொடர்ந்து செல்லுபவனாய், ஸ்வார்ஹ - தனக்குரிய, தன்னுடைய பிரபந்நநிலைக்கு ஏற்றதான என்றபடி, அநுஜ்ஞாதஸேவா - அநுஜ்ஞாகைங்கர்யங்களுடைய, விதிஷு அநுஷ்டாநங்களில், செய்யும் முறைகளில், சகநே - சக்தியிருக்குமானால், யாவதிஷ்டம் - இஷ்டத்தை அநுஸரித்து, ப்ரவ்ருத்த: - ஊக்கம் கொண்டவனாய், த்விரூபம் - புண்யம், பாபம், என்று இருவகையான, ப்ரபதநமஹிம - பிரபத்தியின் மஹிமையால், த்வஸ்தசேஷம் - அழிந்தது போக மீதியான, ப்ராரப்தகார்யம் - பயன் கொடுக்கத் தொடங்கின, கர்ம-செய்வினையை, புக்த்வா - அநுபவித்து, ஸ்வாபீஷ்டகாலே - தான்விரும்பிய காலத்திலேயே, பகவத: - பகவானுடைய, பாதமூலம் - திருவடி நிழலை, விசதி - புகுகிறான்,

உரை - கீழ்ச்சொன்ன பிரபந்நாதிகாரிக்கு, தான்

குறிப்பிட்ட காலத்திலேயே, பரமபதம் கிடைக்கும் என்று கூறுகிறார் - பிரபந்நனுக்கு வகுத்த கார்யங்கள், இரண்டு விதமுண்டு, ஆஜ்ஞாகைங்கர்ய மென்னும் அநுஜ்ஞாகைங் கர்யமென்னும், முன்சொன்ன நித்ய நைமித்திகங்கள் ஆஜ்ஞாகைங்கர்யங்களில் சேர்ந்தவை. அவை செய்யா விட்டால் ப்ரத்யவாய முண்டு, அவை பிரபத்திக்கு சேராதவை யாயினும், பகவதாஜ்ஞாரூபமான சாஸ்திர விதிகளால் வந்தவையாதலால் விடத்தகாதவை. அநுஜ்ஞா கைங்கர்யமோ வெனில் முன்சொன்ன காம்யகர்மங்களில் தன்னுடைய சக்திக்கும் நிலைமைக்கும், இஷ்டத்துக்கும் ஏற்றபடி தெரிந்தெடுக்கப்பட்டவை. இவற்றுக்கு செய் தால் பயன் உண்டு, செய்ய வில்லையானல் ப்ரத்யவாயமில்லை. ஆஜ்ஞாகைங்கர்யங்களிலும் தனது முன்னோர்கள் சென்ற வழியிலேயே செல்லுவது உசிதம். அது குற்றமற்ற வழியா யிருக்கவேணும். ஒவ்வொருகர்மத்திலும் பற்பல பேதங் கள் காணப்படுமாகையால் அவற்றை தீர்மானிக்க தனது முன்னோர்களின் அநுஷ்டானத்தை பிரமாணமாகக்கொள் என்றபடி, ஆயுள் முடியுங்காலத்தில் வினைகள் அனைத்தும் தொலைந்து விடவேணும். நல்வினை, தீவினை இவ்விரண்டும் இவனுக்கு மோக்ஷவிரோதியாதலால் ஒழிக்கவேண்டியவை. அவற்றை எல்லாம் அநுபவித்து ஒழிக்க கல்பகோடி காலமும் போதாது. வினைகளில் மூன்றுவித முண்டு, ஸஞ்சிதம், ப்ராரப்தம், அப்புபதப்ராரப்தம், என்று சரணாகதி செய்து முடிந்த காலத்திலேயே, ஸஞ்சிதமும் ப்ராரப்தமும் இவனைவிட்டு விடுகின்றன. ஸஞ்சித மாவது - முன்பிறப்புகளில் செய்து அநுபவிக்காமல் வைத்திருப் பவை, ப்ராரப்தமாவது - இப்போது எந்த கர்மத்தின் பயனை அநுபவித்து வருகிறோமோ அது, இதிலும் இப்

பிறவியில் அநுபவிக்க வேண்டியதற்காக ஏற்பட்டவை அப்யுபதப்ராரப்தம் எனப்படும். ப்ராரப்தத்தில், இந்த அம்சம்தவிர மற்றபாகமெல்லாம் பிரபத்தியின் மஹிமையால் தொலைந்துவிடும். இச்சரீர மிருக்கும் வரை அப்யுபத ப்ராரப்தத்தை அநுபவித்து ஒழிக்கவேணும். இவற்றின் பயனாகி இன்பதுன்பங்கள் நேரும்போது வினை கழிந்தது என்று களித்திருக்க ப்ராப்தம் - இப்படிப்பட்டவதிகாரி, தான் கோலின காலத்திலேயே பகவானுடைய திருவடி நிழலை அடைந்து நித்ய சூரிகளுடன் பேராநந்தத்தை அநுபவிக்கிறான்.

एकविंशः श्लोकः

இருபத்தொன்றாவது ச்லோகம்

**श्रुत्या स्मृत्यादिभिश्च स्वयमिह भगवद्वाक्यवर्गैश्च सिद्धां, स्वातन्त्र्ये पारतन्त्र्येऽप्यनितरगतिभिः सद्भिरास्थीयमानाम् ॥ वेदान्ताचार्य इत्थं विविधगुरुजनग्रन्थसंवादवत्या विंशत्या न्यास विद्यां व्यवृणुत सुधियां श्रेयसे वेंकटेशः**

व्याख्या—परमपुरुषार्थसाधिनीं भगवत्प्रपत्तिं प्रमाणतः प्रभावतः प्रवक्तृतश्च विशिंषन् तद्विषयग्रन्थनिर्माणप्रयोजनञ्च प्रतिपादयति—श्रुत्येति—"योब्रह्माणं विदधाति पूर्वं" इत्यादिकया श्रुत्या, "देवानां दानवानां च" "शरण्यं शरणं च त्वां" "शरणं त्वां प्रपन्ना ये ध्यानयोगविवर्जिताः" इति स्मृत्यादिभिश्च,

"स्थिते मनसि सुस्वस्थे" "सकृदेव प्रपन्नाय" "सर्वधर्मान् परित्यज्य" इत्यादिभिः भगवद्वाक्यवर्गैश्च सिद्धाम्—प्रमितामित्यर्थः॥ आप्ततमत्वसूचनायात्र भगवच्छब्दः, स्वातन्त्र्ये, पारतन्त्र्येपि—अव्यवधानेन व्यवधानेनवा मुक्तिसाधनत्वे; यद्वा—स्वतन्त्राङ्गत्वविवादेपीत्यर्थः। गुरुजनग्रन्थाः—स्तोत्रगद्यादयः.

பதவுரை—வேதாந்தாசார்ய: - வேதாந்தாசார்யன் என்ற பிருது பெற்ற, வேங்கடேசன் - வேங்கடநாதன் என்ற கவி, ச்ருத்யா - சுருதியாலும், ஸ்மிருத்யாதிபிச்ச - ஸ்மிருதி, இதிஹாஸ, புராண, ஆகம, இவைகளாலும், இஹ - இவ்விஷயமான, ஸ்வயம் - நேராகவே நின்று சொன்ன, பகவத் வாக்யவர்கைச்ச - பகவான் அருளிய வாக்யத் தொகுதிகளாலும், ஸித்தாம் - தீர்மானிக்கப் பட்ட, ஸ்வாதந்த்ர்யே - மோக்ஷத்துக்குத் தனி உபாயமாக விருப்பதிலும், பார தந்த்ர்யே - மற்றொன்றில் உள்ளடங்கி யிருப்பதிலும், அகிதரகதிபி: - வேறு கதியில்லாத, ஸத்பி: - ஸத்துக்களாலே, ஆஸ்தீயமாநாம் - ப்ரகாசப் படுத்தப்பட்டதுமான, ந்யாஸவித்யாம் - சரணுகதி வித்யையை, இத்தம் - கீழில் சொன்னமாதிரி, விவித - நாநா விதமான, குருஜந - ஆசார்யர்களுடைய, க்ரந்த - ஸ்தோத்ரரத்நம், கத்யத்ரயம், முதலான க்ரந்தங்களோடு, ஸம்வாதவத்யா - ஒற்றுமை வாய்ந்த, விம்சத்யா - இந்த ந்யாஸ விம்சதி என்ற இருபது ச்லோகமடங்கிய நூலால், ஸுதியாம், நற்புத்திக்காரர்களுக்கு, ச்ரேயஸே - நன்மை உண்டாகும் பொருட்டு, வ்யவ்ருணுத - விளக்கினர்.

உரை—எம்பெருமானிடத்தில் சரணுகதி செய்தால் மோக்ஷம் பெறலாம் என்பதை, வேதங்கள், ஸ்மிருதிகள் இதிஹாஸங்கள், புராணங்கள் - ஆகமங்கள் இவற்றிலுள்ள

பிரமாண வசநங்களைக் கொண்டு சாதித்து, பிரபத்தியின் மகிமையையும் விளக்கிக்காட்டினார். ஸ்ரீ பகவான் தானே சொன்ன வாக்கியங்களைக் கொண்டும் தெளிவுற அறிவித்தார். மேலும் பக்திக்கு அங்கமாக அநுஷ்டிக்கப்படும் பிரபத்தி, பக்தி மூலமாக அதாவது பக்தியைத் தலைக்கட்டி வைத்து அதின் மூலமாக மோக்ஷந்தரும். தனி உபாயமாகவே செய்யப்பட்ட ப்ரபத்தி, பக்தியை இடையிடாமல் நேராகவே மோக்ஷத்தைத் தரும். இதை பல பெரியோர்கள் அநுஷ்டித்து, பயன் பெற்றிருக்கிறார்கள். இப்படி இந்த ந்யாஸ விம்சதியில் கூறிய விஷயங்கள் எல்லாம், ஸ்ரீ ஆளவந்தார் அருளிய ஸ்தோத்திர ரத்நம், ஸ்ரீ உடையவர் அருளிய கத்யத்ரயம் முதலான ஆசார்ய க்ரந்தங்களை ஆதாரமாகக் கொண்டு ஸ்ரீ தேசிகன் விளக்கிக் காட்டி அருளினார். இந்த ந்யாஸ விம்சதியை ஸ்ரீ தேசிகன் எதற்காகச் செய்தருளினார் என்றால் - நல்ல புத்தி யுடையவர் நன்மை பெறுவதற்காகவே. ஆதலால் நமது உடையவர் திருவடி ஸம்பந்தம் பெற்ற வைஷ்ணவர்களும் மற்றவர்களும் கூட இந்த புத்தகத்தை படித்து பிரபத்திவிஷயத்தை நன்கு அறிந்து, அப்படியே அநுஷ்டித்து, பேரின்பம் பெற்று வாழவேணும் என்பது இந்த க்ரந்த கர்த்தாவின் திருவுள்ளம்.

**इति श्री कवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य श्रीमद्वेदान्ताचार्यस्य कृतिषु न्यासविंशतिः संपूर्णा.**

**द्वाविंशः श्लोकः**

**இருபத்திரண்டாமது ச்லோகம்**

**संसारावर्त वेग प्रशमन शुभदृग्देशिक प्रेक्षि-**

तोऽहम् संत्यक्तोन्यै रुपायैरनुचितचरितेष्वद्य शान्ताभिसन्धिः। निश्शङ्कस्तत्वदृष्ट्या निरवधिकदयं प्राप्य संरक्षकं त्वां न्यस्य त्वत्पादपद्मे वरद निजभरं निर्भरोनिर्भयोस्मि।

व्याख्या—उक्तमुपायं सुग्रहणाय स्वानुष्टान मुखेन निगमयति-संसारावर्तेति,—अत्र सर्वशक्तौ, परमकारुणिके सर्वाभिमतवरप्रदे न्यस्तभरत्वात्, निर्भरत्वनिर्भयत्वसिद्धिः अयमत्रमुमुक्षोरनुशासनीयसंग्रहः—सदाचार्योप सत्तिपूर्वकं सम्यक् ज्ञानं संपाद्य, गुरुतरोपायान्तरनिष्पादनाद्यनुगुणज्ञानशक्तिविरहात् निर्विण्णः स्वशक्य सकृत्कर्तव्य लघूपाय परामर्शेन प्रत्यवस्थापितः फलसङ्गकर्तृत्वादित्यागयुक्त साङ्गभरन्यासेन कृतकृत्यः स्वीकृतभरं शरण्यं श्रियःपतिमवलोक्य, निर्भरोनिर्भयश्च स्वयंप्रयोजनकैङ्कर्येण सुखं वर्तेत इति इति श्रीकवितार्किकसिंहस्य स्वतन्त्रस्वतन्त्रस्य श्रीमद्वेङ्कटनाथस्यकृतिषु न्यासविंशतिव्याख्या संपूर्णा.

பதவுரை—ஹேவரத - ஓ வரதனே, அஹம் - நான், ஸம்ஸார - ஸம்ஸாரமென்னும், ஆவர்த்த - நீர்ச்சுழலின், வேக - வேகத்தை, ப்ரசமந - அடக்குகின்ற, சுபத்ருக் - 'க்ஷேமகரமான கண்பார்வையை உடையவர்களான, அல்லது, சுபத்ருக் வரையில் ஒருபதமாக்கி, நற்கதிக்கு மூலகாரணமான பகவத்கடாக்ஷம் பெற்றவனாய் என்றும் பொருள்கூறலாம். தேசிக, ஆசார்யர்களால், ப்ரேக்ஷித: - கடாக்ஷித்து அநுக்ரஹிக்கப்பட்டவனாய், அந்யை: - மற்ற, உபாயை: - உபாயங்களாலே, ஸந்த்யக்த: - விடப்பட்டவனாய், அநுசித - தகுதியற்றவைகளான, சரிதேஷு - நடத்தைகளில் அதாவது - நிஷித்தகாம்ய கர்மங்களில்,

சாந்தாபிஸந்தி: - கருத்தொழிந்தவனாய், அத்ய - இப்போது - அதாவது இந்த நிலையில், தத்வத்ருஷ்ட்யா - தத்துவஞ்ஞானத்தால், நிச்சங்க: - ஸந்தேகமற்றவனாய், நிரவதிகதயம், அளவில்லாக் கருணைகொண்ட, த்வாம் - உன்னை, ஸம்ரக்ஷகம் - இரக்ஷிப்பவனாக, ப்ராப்ய, அடைந்து, அதாவது, என்னை இரக்ஷிக்கக்கடவாய் என்று பிரார்த்தித்து, த்வத்பாதபத்மே - உன் திருவடிதாமரையில் நிஜபரம் - எனது பாரத்தை, ந்யஸ்ய, அடைக்கலம் செய்து, நிர்பர: - சுமை கழிந்தவனாகவும், நிர்பய: - பயமற்றவனாகவும், அஸ்மி - இருக்கிறேன்.

உரை—கீழ்ச் சொன்ன உபாயத்தை நன்கு தெரிவிப்பதன் பொருட்டு, தன்னுடைய அநுஷ்டாநத்தை உதாஹரணமாகக்காட்டி கிரந்தத்தை தலைக்கட்டுகிறார் - ஸர்வசக்தனாயும் பரமகாருணிகனாயும், மநோரதங்கள் எல்லாவற்றையும் தரவல்லவனுமான பகவானிடத்தில் தனது சுமையை ஒப்புவித்துவிட்டபடியால் சுமை கழிந்தமையும், பயமற்றிருக்கையும் கைகூடித்து. சுருக்கமாய் முமுக்ஷுவுக்கு உபதேசிக்கவேண்டிய பொருளை அடியிற்காண்க. முதன் முதல் - ஸதாசார்யனைத்தேடி ஆச்ரயிக்கவேணும், பின்பு, அவ்வாசார்யனிடமிருந்து, தத்துவநிலைகளையும், உபாயஸ்வரூபங்களையும் கசடறக் கற்று உணரவேணும், அதற்குப் பின் - கஷ்டஸாத்யமான வெவ்வேறு உபாயங்களை அநுஷ்டிக்க அறிவும், வல்லமையும் இல்லாமை கொண்டு, மிகவும் நிர்வேதம் கொள்ளவும், அதன்மீது, தனக்கு சக்யமாயும், ஒரேதடவை செய்ய வேண்டியதுமான எளிதான உபாயத்தை விசாரித்து, அதில் நிலை நின்றவனாய், அதன்மேல், ஆநுகூல்யஸங்கல்பம் முதலிய ஐந்து அங்கங்களோடு பரந்யாஸத்தை அநுஷ்டித்து, அப்படி அநுஷ்டிக்கும்போது,

பரந்யாஸத்தால் ஏற்படுகிற பயனிலும், அதில் அஹங்கார மமகார ரூபமாயிருக்கிற ஸங்கத்திலும், செய்தவன் நான் என்கிற கர்த்ருத்துவத்திலும் துவக்கற்றவனாகி, தனது சரணாகதியை ஏற்றுக்கொண்ட சரண்யனான ச்ரிய: பதியை நினைத்து நிர்பரனாய் நிர்பயனாய் இருந்து, ஸ்வயம்ப்ரயோஜநமான பகவத் கைங்கர்யத்தைக் கொண்டு வாழ்நாளை சுகமாகக் கழிக்கவேணும் என்று.

இங்கு மிகச் சுருக்கமாகக் கூறப்பட்ட பொருளை, ஸ்ரீதேசிகன், ஸ்ரீ மத்ரஹஸ்யத்ரயஸாரத்தில், அர்த்தாநுசாஸநபாகம் என்ற முதல் பாகத்தில் உபோத்காதாதிகாரம் முதல், பரிபூர்ண ப்ரஹ்மாநுபவாதிகாரம் வரை 22 அதிகாரங்களால் விரிவாகக் காட்டியிருக்கிறார். அங்கு விளக்கிய பொருளையும் முடிவில் ஒரு ச்லோகத்தால் சுருக்கி அருளிச் செய்திருக்கிறார். அந்த ச்லோகத்தையும் இங்கு அநுஸந்திப்பது பொருந்துமாகையால் அந்த ச்லோகத்தை மட்டும் அடியில் வரைகிறோம். இந்த ச்லோகத்தின் பொருளை ஆசார்யர்களிடமிருந்து கேட்டுத் தெரிந்து கொள்ளவும் - புத்தகம் விரியுமாதலால், உரை எழுதாமல் இத்துடன் விரமிக்கிறோம்.

**सन्दृष्टः सारवाग्वित् स्वपरनिशितधीःसङ्ग-जित् नैकसंस्थः स्पष्टोपायोतिखिन्नः सपरिकर भरन्यास-निष्पन्नकृत्यः ॥ स्वावस्थार्हं सपर्याविधिमिह नियतं व्यागसं क्वापि बिभ्रत् निर्मुक्तस्थूलसूक्ष्मप्रकृतिरनुभव-त्यच्युतं नित्यमेकः ।**

சுபமஸ்து

தூப்புல்பிள்ளை திருவடிகளே சரணம்